# ஸ்ரீ சண்டி சப்தசதி

## (ஆராதனை யக்ஞ விதி)







ஆச்சாள்புரம் கமலா நிலைய வரிசை-2

பிரதிபா பிரசுரம்

39, ஆடம் தெரு, மைலாப்பூர், சென்னை - 600 004.



# பிரதிபா பிரசுரம் பணிக்கு உதவும் ஆச்சாள்புரம் ஆராய்ச்சிக் குழு

தான் பெற்ற இன்பம் பிறரும் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் தேவி சம்பந்தமான மந்திர, தந்திர, யந்திர விவரங்களை எல்லாம் தக்க நிபுணர்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்து வெளிப்படுத்தும் அருமையான பணியை

*ஆச்சாள்புரம்* சர்க்தரத்ன

## ஸ்ரீ வி. கோவிந்தராஜ பிள்ளை

அவர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள்

இவருக்கும் இப்பணியில் உதவும் குழுவிலுள்ள பெரியோர்கள்:

*புதுக்கோட்டை* ஸ்ரீ (டாக்டர்) வைத்தியநாத சாஸ்திரிகள் *(தலைவர்)*

*திருக்கோலக்கா* ஸ்ரீ ராமநாத சிவாச்சாரியார்

*ஆச்சாள்புரம்* ஸ்ரீ தியாகேச சிவாச்சாரியார்

*ஆச்சாள்புரம்* ஸ்ரீ ஞானஸ்கந்த சிவாச்சாரியார்

எங்கள் பணியில் ஸ்ரீ பிள்ளை அவர்களும் இந்த ஆராச்சிக் குழுவினரும் மிகப் பக்க பலமாக இருந்து வருகின்றனர். இதன் பலனாக பல அருமையான மந்திர, தந்திர, யந்திர விஷயங்கள் ஆழ்கடலிலிருந்து முத்து எடுத்து தரப்படுவது போல எடுத்துத்தர இயலும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

-- *பிரதிபா பிரசுரத்தினர்*

# ஸ்ரீ சண்டி சப்த சதி

## (விளக்கம், ஹோம விதானம், பாராயணக் கிரமத்துடன்)



ஆசிரியர் :
" நஜஸீ "
(எஸ். நடராஜன்)



— பிரதிபா பிரசுரம் —

ஆச்சாள்புரம் கமலா நிலையத்தில்
*1978, சாரதா நவராத்ரி சண்டி ஹோம பூர்ணாஹுதியின் போது*
திருப்பனந்தாள் ஆதீனகர்த்தர் அவர்களால் வெளியிடப்பட்டது.

பிரசுரித்தவர் :
என். லலிதாம்பாள்

**பிரதிபா பிரசுரம்**

**39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை–600 004,**

**phone : 74720**

 [விலை ரூ. 8-00

ஸ்ரீ சண்டி சப்த சதி
(Sri Chandi Sapthasathi)

முதல் பதிப்பு: நவராத்ரி, செப். 1978

விலை ரு. 8.00



பிரதிபா பிரசுரம்
34

ஹோம விதானப் பகுதி ஆசிரியர்:
**ஸ்ரீ தியாகேச சிவாச்சாரியார்**

ஆச்சாள்புரம் ஆராய்ச்சிக் குழு ஒத்துழைப்புடன் தயாரிக்கப்பட்டது.

## பொருளடக்கம்



பூங்குழலி அச்சகம். இராயப்பேட்டை சென்னை-600014.

# காணிக்கை



கயிலே குருமணி தருமை குரு மகா சந்நிதானம்
(25-வது பட்டம்)

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமண்ய தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்யார்**

அவர்களின் நினைவிற்கு இந்நூல் பக்தியுடன்
காணிக்கையாக்கப்படுகிறது.

**இந்த சப்தசதி ஹோமத்தை விடாமல் தொடர்ந்து நடத்தி வரும் ஆச்சான்புரம் ஸ்ரீ வி. கோவிந்தராஜ பிள்ளை அவர்களுக்கும் இந்நூல் உருவாக நன்கொடை உதவிய டாக்டர் (ஸ்ரீ) எம். நடராஜன் அவர்களுக்கும் 'நவாக்ஷரி'யை உபதேசித்தவர் இந்த குரு மகா சந்நிதானம் அவர்களே. ஆகவே இந்நூலை இம்மகானின் நினைவிற்கு காணிக்கையாக்குவதில் பெருமையடைகிறோம்.**

**—பிரதிபா பிரசுரத்தினர்**

# பதிப்பாசிரியர் நன்றி

ஸ்ரீ சண்டி சப்த சதி பிரதிபாவின் 34-வது புத்தமாக வெளி வருவதில் ஒரு பொருத்தம் உள்ளது (3+4=7) பெயரி லேயே சப்த என்ற ஏழு இருக்கிறது.

ஆச்சாள்புரம் ஸ்ரீ வி. கோவிந்தராஜ பிள்ளை அவர்கள் எங்கள் தெய்வீகப் பணிக்கு பல விதங்களில் உதவி வருவது நமது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கும். ஆச்சாள்புரம் கமலா நிலைய வரிசை என்ற தலைப்பில் சென்ற வசந்த நவராத்ரியில் 'கணபதி ஹ்ருதயம்' இந்த வரிசையில் முதல் புத்தகமாக வெளி வந்தது. இப்போது ஆச்சாள்புரத்தில் நடத்தப்பட்டுவரும் சண்டி ஹோம விதானம் எல்லோருக்கும் பயன்பட அந்த வரிசையில் இரண்டாவது புத்தகமாக வெளிவருகிறது.

டாக்டர் நடராஜன் அவர்கள் எங்கள் பணியை ஆதரித்து ஊக்குவித்து வருபவர். இப்புத்தகம் வெளி வர அவர் அளித்த நன்கொடைக்கு நாங்கள் மிகவும் நன்றியுள்ளவர்களாக இருக்கிறோம். டாக்டர் நடராஜன் அவர்களுக்கும், ஸ்ரீ வி. கோவிந்தராஜ பிள்ளை அவர்களுக்கும், குருவாக இருந்து நவாக்ஷரி மந்திரோபதேசம் செய்தவர் கயிலை குரு மணி தருமை ஆதின 25-வது பட்டம் பரமாச்சார்ய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மகா சந்நிதானம் அவர்கள். ஆகவே இந்த அம்பிகை பற்றிய புத்தகத்தை அம்மகானுக்கே சமர்ப்பணம் செய்திருக்கிறோம்.

ஆச்சாள்புரம் ஆராய்ச்சிக் குழுவினர், முக்கியமாக ஸ்ரீ தியாகேச சிவாச்சாரியார் அவர்களுக்கு இதை உருவாக்கியப் பெருமை உண்டு. அவர்களுக்கு எங்கள் நமஸ்காரம்.

தருமை ஆதீன குரு மகா சந்நிதானம், சிருங்கேரி ஜகத்குரு அவர்கள், காமகோடி பீடம் ஜகத்குரு அவர்கள் புதுக்கோட்டை பெரியவர்களான ஸ்ரீ சத்குரு சுவாமிகள் ஆகியவர்கள் அனுக்கிரஹித்த அருளாசிகளுக்கு அவர்களுக்கு எங்கள் நமஸ்காரம்.

சண்டி விஷயமாக விசேஷ ஈடுபாடு கொண்டவர்கள் திருப்பனந்தாள் காசிமடம் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இந்த நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளது மிக மிக பொருத்தம். அவர்களே இந்த புத்தகத்தை வெளியிட நேர்ந்தது எங்கள் பாக்கியம். அவர்களுக்கு எங்கள் நமஸ்காரம்.

அட்டைப் படத்தை உருவாக்கித் தந்த ஸ்ரீ சித்ரலேகா அவர்கள் குறித்த காலத்தில் அச்சடித்துத் தந்த பூங்குழலி ஸ்ரீ முத்துக்கிருஷ்ணன் அவர்கள் ஆகியவர்களுக்கு எங்கள் நன்றி.

மயிலாப்பூர்
நவராத்ரி 3—10—78

**என். லலிதாம்பாள்**
(பதிப்பாசிரியர்)

27-5



"சண்டி சப்த சதி" என்ற இந்த அறிய நூல்
வெளியாவதற்கு நன்கொடை உதவிய

**டாக்டர் (ஸ்ரீ) எம். நடராஜன்**

அவர்களுக்கு

எங்கள் மனப்பூர்வமான நன்றியைத்
தெரிவித்துக் கொள்கிறோம்.

—*பிரதிபா பிரசுரத்தினர்*

# ஆசிரியர் முகவுரை

அம்பிகையை நாம் வழிபடுவது அவளிடம் எதையும் உத்தேசித்துப் பெற அல்ல என்பது மிக மேலான லக்ஷியம். ஆனுல் காம்யமாக ஒரு குறிப்பிட்ட காரியம் ஸித்தியாக அவளை அணுகுவதில் தவறில்லை. அவளிடம் செல்லாமல் பின் யாரிடம் கேட்பது? நமக்கு இன்னது வேண்டும் என்பது நாம் கேட்டுத்தாஞ அவளுக்குத் தெரியவேண்டும்?

தெய்வத்தின் இஷ்டப்படியே நடக்கட்டும் நாம் அவள் குழந்தை தானே! அவள் கிருபை செய்கிறபோது செய்யட்டும். இந்த மனப்பான்மை ஏற்பட அவகாசம் வேண்டும். இம் மனப்பான்மை ஏற்படும் வரை நம் இஷ்டப்பூர்த்திக்கு அம்பிகையை வேண்டுவது தவறல்ல. நம்மைப் போன்ற பிறரை நம்பாமல் தெய்வத்தை நம்பு கிருேமே! இதுவே சிறந்த மார்க்கத்தின் முதல் படி.

காரிய ஸித்திக்கு சில பிரயோகங்கள் உண்டு. அவைகளை நிறைவேற்ற சில நியதிகள் உண்டு. சண்டி ஹோமம் போன்ற கைமேல் பலன் தரக்கூடிய வழிகள் அதை செய்பவர்க்குமட்டுமின்றி வீட்டிற்கும் நாட்டிற்கும் லோகத்திற்குமே நன்மை அளிப்பது.

அம்பிகையை உபாசிப்பதும் அவளைக் குறித்து சண்டி ஹோமம் செய்து ஆராதிப்பதும் பூர்வ புண்ய பலன் என்றே சொல்லவேண்டும். குடத்தினுள் வைத்துள்ள விளக்கு போல ஆச்சாள்புரம் ஸ்ரீ வி. கோவிந்தராஜ பிள்ளை அவர்கள் பல ஆண்டுகளாக ஒரு ஆண்டில் வரும் வசந்த, சாரதா நவராத்திரிகளில் தொடர்ந்து சண்டி ஹோமம் நடத்தி வருகிருர்கள்.

அடியேன் வழிபடும் அம்பிகையின் அருள் தான் என்னை அவருடன் சேர்த்து வைத்தது. அவர் சண்டி ஹோமத்தை ஒரு சிறந்த முறையில் செய்து வருகிருர். இம்முறை எல்லோருக்கும் தெரிந்து இதை நடத்த வேண்டும் என்ற ஸ்ரீ பிள்ளை அவர்களின் ஆர்வமே இதை புத்தகமாக வெளியிட எனக்கு அனுமதி தர வைத்தது.

பிற மதக்காரரான ஹைதர் அலியும் திப்பு சுல்தானும் இந்த சண்டி ஹோமத்தை தக்க பிராம்மணர்களைக் கொண்டு நடத்தச் செய்து பயன் பெற்றிருக்கிருர்கள் என்பது இதன் பெருமையை உணர்த்தும்.

எவ்வளவோ பேர்களுக்கு அன்னதானம் செய்தாலும் அதில் ஒருவர் மகானுக இருந்தால் அவ்வளவு பேர்கள் உண்டதின் புண்ணியம் கிடைக்கும் என்பார்கள். இந்த ஹோம விதானத்தைப் படித்து அப்படிப் படித்தவர்கள் இரண்டொருவருக்கு இது பயன்பட்டாலும் போதும் என்ற நோக்குடனேயே இதை வெளியிடுகிருேம்.

பல தேவி பக்தர்கள் கூடி ஒத்துழைத்ததால் வெளி வந்த புத்தகம் இது. தேவியின் சண்டி ஹோமத்தைப் பற்றி நன்கு அறிய இது நிச்சயம் பயன்படும் என்று எதிர்பார்க்கிருேம்.

மயிலாப்பூர்
*சாரதா நவராத்ரி*
*3—10—78*

இப்படிக்கு,
**எஸ். நடராஜன்**
**(நஜன்)**

# தருமபுர ஆதீனகர்த்தரின் அருளாசி

உ
குருபாதம்

தருமையாதினம்
ஸ்ரீலஸ்ரீ
சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்



தருமபுரம், மாயூரம் P.O.
*29—3—1978.*

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே"



அரிய பரம்பொருள் எளிமையாக வந்து அருள் வழங்கும்போது அருளாளர்கள் அடையும் மகிழ்ச்சிக்கும் இன்பத்திற்கும் எல்லை யில்லை. 'எத்தனையும் அரியை நீ எளியை ஆனாய்' என்று அப்பர் பெருமான் பரம்பொருளின் எளி வந்த கருணையை வியந்து போற்று

கிறார். சைவ—வைணவ சமயங்களில் வழிபடப் பெறுகின்ற கருணைத் திருவுருவங்கள், அவற்றின் பேதங்கள், சகஸ்ரநாமங்கள், ஸ்ரீ சக்ரம், ஆவரண தேவதைகள், தீபபூஜை, சமய விழாக்கள் இவைகளைப்பற்றிய விளக்கங்களைத் தெள்ளத் தெளிய அறிந்து கொள்ள விரும்பும் அன்பர்கள் எளிய இனிய நடையில் சமயநூல்கள் பிரசுரமாகுமானால் எவ்வளவு மகிழ்ச்சியோடு விரும்பி வரவேற்றுப் போற்றுவார்கள்! அத்தகைய சீரிய பணியை அன்பர் ஸ்ரீ நடராஜன் ஊக்கத்தோடும் உவகையோடும் செய்து வருவது பாராட்டுக்குரியது. இதுவரை முப்பத்து மூன்று புத்தகங்கள் வெளி வந்துள்ளன.

இப்போது ஸ்ரீ சண்டி சப்த சதி முப்பத்து நான்காவாவது பிரதிபா பிரசுரமாக வெளிவருகிறது. இதில் நமது ஆதீனத்துக் கயிலைக் குருமணிகளிடம் உபதேசம் பெற்ற திரு. கோவிந்தராஜ பிள்ளை, டாக்டர் திரு. நடராஜ பிள்ளை இவர்களின் துணைகொண்டு கவசம், அர்க்களம், கீலகம், தேவி சூக்தம், பாராயணக் கிரமம், ஹோம விதானம் எல்லாவற்றிற்கும் முழுமையான விளக்கங்கள் தரப் பெற்றுள்ளன. ஸ்ரீ வித்யோபாஸ்கரராகிய நூலாசிரியரின் அரிய உழைப்பினை இந் நூலிலும் காணலாம். கயிலைக் குருமணிக்குக் காணிக்கையாக அளிக்கப் பெறும் இப்பிரசுரம் அம்பிகைக்குரிய நவராத்திரி விழாவில் வெளிவருவது மகிழ்ச்சி தருவதாகும்.

அன்பர் ஸ்ரீ நடராஜன் இதுபோன்ற நூல் வெளியீட்டுப் பணியை மேன்மேலும் செய்து சிறப்புற்று வாழச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

---

# சிருங்கேரி ஜகத்குருவின் அருளாசி



ஸ்ரீ ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய
மகா சமஸ்தானம்,
சாரதா பீடம், சிருங்கேரி.

ஸ்ரீ நடராஜன் அவர்களுக்கு,

உங்கள் கடிதம் (8-9-78) கிடைக்கப்பெற்று ஸ்ரீலஸ்ரீ மகா ஸந்நிதானம் அவர்களின் பாத கமலங்களில் உங்கள் நமஸ்காரங்களும் சமர்ப்பிக்கப்பட்டது. இத்துடன் அனுக்கிரகப் பிரசாதம் அனுப்பி இருக்கிறோம்.

சிருங்ககிரி, 14—9—78

டி. தட்சணாமூர்த்தி (காரியதரிசி)

ஸ்ரீ ஸத்குரு சதாசிவ பிரும்மேந்திர
சரஸ்வத்யவதூத சுவாமிகள் அதிஷ்டானம், புதுக்கோட்டை.

# ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அருளாசிச் செய்தி



தேவீ உபாஸனை என்பது நமது இந்திய நாட்டில் வேதம் தோன்றிய ஆதி காலம் தொட்டு வாழையடி வாழையைப்போல் இன்றும் இருந்து வருகிறது. நமது பாரத தேசத்தின் பண்டைய மஹரிஷிகளின் பாரம்பர்யத்தில் வந்துள்ள அனைவருமே தேவீ உபாஸகர்கள் தான் என்பதை விசாரணை செய்து பார்த்தால் தெரியும்.

கேனோபநிஷத்தில் அன்னையை 'உமா' என்று போற்றுகிறது. மாத்ரு தேவோபவ என்கிறது வேதம். புராணங்களிலும் ஜகஜ்ஜனனியான ஸ்ரீ மாதாவின் வழிபாட்டைப்பற்றி வேத வியாச பகவான் விரித்துரைத்திருக்கிறார்கள்.

உலகில் உள்ள சமயங்கள் அனைத்தும் கூடத் தாயை தெய்வமாகவே வணங்கி வருவதை இன்றும் காணும்போது ஆதி பராசக்தியான அன்னைக்கு மிஞ்சிய தெய்வமில்லை என்பதை நன்கு தெரிந்து கொள்ள முடியும்.

இந்தியாவில் நமது வைதீக (இந்து) மதத்தில் சாக்த மதமே சக்தியை (ஆன்ம சக்தியை) வழிபடும் மார்க்கத்தை விரிவாகச் சொல்லும் மதமாகும்.

தாயை நன்கு உறுதியாக வழிபடுகிற நல்லறிவு மிக்கவர்கள் வேற்றுமையற்ற ஆற்றல் மிக்கவர்களாகவே திகழ்வார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இது தருணம் மக்களுக்கு ஒருமைப் பாட்டைப் பற்றிய உண்மையைத தைரியமாகச் சொல்ல சக்திதான் வேண்டியிருக்கிறது. ஆற்றல் மிக்க சக்தியின் (தேவியின்) வழிபாடு ஒன்றே இது தருணம் மக்களுக்கு மிகவும் அவசியமென்ற உண்மையை உணர்ந்த ஆஸ்திகோத்தமரான "நஜன்" அவர்கள உலகில் உள்ள தமிழ் அறிந்த மக்கள் அனைவருக்குமே சண்டி சப்த சதி என்கிற தேவீ மஹாத்மியமெனப் போற்றப்படும் ஒரு மஹா மந்திர சாஸ்திரமாகிய நூலைக் கொண்டு எப்படிப் பாராயணம் செய்ய வேண்டுமென்றும் அதைக் கொண்டு எப்படிக் கிரமமாக சண்டி ஹோமங்களைச் செய்ய வேண்டுமென்கிற வழியை நன்கு புரிந்துகொண்டு உபாஸிக்க வேண்டுமென்பதற்காகவே சண்டீ சப்த சதி (பாராயணக் கிரமும ஹோம விதானமும்) என்கிற மிக உயர்ந்த மஹா மந்திர சாஸ்திரமாகிய

புத்தகத்தை இந்த புனிதமான நவராத்திரியில் வடமொழி பயிலாத வர்களும் சப்த சதியின் கருத்துக்களை நன்கு உணர்ந்துகொண்டு நியம மாகப் பாராயணம் செய்து அனைவருமே இஹலோக, பரலோக சுகங்களைப் பெற்றுய்ய வேண்டுவென்பதற்காகவே வெளியிடுவதானது தேவீ உபாஸகர்களுக்கெல்லாம் ஒரு கிடைக்கக்கூடாத குறையற்ற நிதியாகுமென்பதை அளவிட முடியாத சந்தோஷத்துடன் தெரிவிக்க லானேம்.

இந்த மஹாமந்திரமாகிய நூலில் கவசம், அர்க்கலம், கீலகம், மற்றும் ராத்ரீ ஸுக்தம். தேவீ ஸுக்த விளக்கங்களுடன் சப்த சதியில் வரும் சக்திகள் அனைத்தும் விரிவாக மக்கள் அனைவரும் நன்கு புரிந்து கொண்டு வழிபடவேண்டு மென்பதற்காகவே நஜன் அவர்கள் இந்த மந்திர சாஸ்திரத்தைத் தமிழகத்திகுக் கொடுத்து மாபெரும் உபகாரத்தைச் செய்துள்ளார்கள் என்றுதான் சொல்லவேண்டும்.

இம்மையில் மக்களுக்குண்டாகியுள்ள தாரித்ரியத்தையும், துக்கத்தையும், பயத்தையும் தாயை வழிபட்டுத்தான் எல்லோரும் போக்கிக் கொள்ள வேண்டுமென்கிற மேலான நல்ல எண்ணத்துடன் உலக நன்மைக்கே தம் வாழ் நாட்களை அர்ப்பணம் செய்துகொண் டுள்ள நமது நஜன் அவர்கள் இந்த நல்ல மந்திர சாஸ்திரத்தை நல்லறிவு மிக்க நன்மக்கள் எல்லோருக்குமே தேவியின் பிரஸாத மாகவே நவராத்திரி புண்ய காலத்தில் கொடுப்பதை நினைக்கும்போது நமது நஜனைப் போன்று உபகரித்ததவும் ஆத்மபந்துவை உலகில் காண்பது மிக்க துர்லபமாகு மென்று தான் சொல்லவேண்டும். நன்மக்களாகிய ஒவ்வொருவரும் துக்கமற்ற நிரந்தர சுகத்துடன் வாழவேண்டு மெனபதற்காகவே, பாராயணத்தின் பலத்தினுலேயே சாசுவதமான சுகத்தைக் கொடுக்கும் சண்டீ சப்தசதீ என்ற இந்த நூலை வாங்கிப் பாராயணம் செய்து சண்டிஹோமங்களையும் நன்கு செய்து ஆதிபராசக்தியான அம்மையை இம்மையில் இடைவிடாது மேலும் முழுமனத்துடன் வழிபட்டு அற்புதமான ஞானசித்தி களாகிய சக்திகளையும் பெற்றுள்ள சுத்த சைதன்ய மயமான பகவான் தத்தாத்ரேயர், அவர் சிஷ்யர் பரசுராமர், அகத்தியர், துர்வாஸர் போன்றும் ஆதிசங்கரர், பாஸ்கரராயர், அபிராமி பட்டர் போன்றும் தேவியின் திருவருளை இம்மையில் பெற்று குறையற்ற செல்வத்துடன் குன்றின் மேலிட்ட தீபம் போல் நல்லறிவு மிக்க ஜீவன் முக்தர்களாக எல்லோரும் பிரகாசிக்கவேண்டு மெனவும் ஞாப கப்படுததுகிறோம்.

அதிசீக்ரமாகவும் அதி சுலபமாகவும் ஞானஸித்தியையும் சக்தி களையும் விரும்புகிற நன் மக்கள் அனைவரும் பிரும்மத்தின் சக்தி அம்சத்தைத்தான் இடைவிடாது ஊக்கமாக உறுதியாக உபாஸிக்க வேண்டு மென்பதையும் ஞாபகப்படுத்துகிறோம். ஸ்ரீ வித்தையை அதிசுலபமாக எல்லோருமே புரிந்துகொண்டு உபாஸிக்கும்படியான நூல்களை எல்லாம் மேலும் உலகமக்கள் அனைவருடைய ஆத்ம பந்துவான போற்றத்தக்க நஜன் அவர்கள் இடைவிடாது எல்லோ ருக்கும் கொடுத்துக்கொண்டே இருக்கவேண்டுமென ஜகஜ்ஜனனி யான ஸ்ரீ மாதா புவனேசுவரி தேவியைக் ஏத்தி மேலும் விசேஷ ஆசிகளை அநுக்கிரஹித்துக்கொண்டேயிருக்கிறோம்.

சேலம், இங்ஙனம்,
1-9-78 சுவாமி சாந்தானந்தா

## ரிஷிகேசம் ஸ்ரீ வித்யா பீடம்

## ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ராமகிருஷ்ணனந்த சரஸ்வதி சுவாமிகள்

# ஸ்ரீமுகம்

உலகில் கிருஷ்டிக்கப்பட்ட ஸகல ஜந்துக்களும் சக்தியின் நிமித்தம் தோற்றுவிக்கப்பட்டதை யாவரும் அறிவர். அப்படிப்பட்ட சக்தியை தாயெனவும், ஜகதீஸ்வரி எனவும் அகிலாண்டேஸ்வரியாகவும் போற்றி கொண்டாடி வருகிறோம். ஸகல கல்யாண குணங்களேயும் ஒருங்கே அமையப் பெற்று சத்வ, ரஜஸ், தமோ குணங்களுடன், இச்சா, ஞான, கிரியா, போன்ற சக்தி ஸ்ரூபியான ஸ்ரீ அப்பாள் நமக்கு எல்லா ஐச்வர்ய பாக்கியங்களேயும் கொடுக்க வேண்டி• தர்மத்தைக் கொண்டு ஆட்சி புரியும் பட்டமகிரிஷியாக சிம்ஹாஸனத்தில் அமர்ந்து ராஜ்ப பரிபாலனம் செய்து கொண்டு கையில் பாச அங்குசத்தை ஏந்திபவளாகவும் கரும்பு வில், மற்றும் அபய வரத முத்திரைகளுடன் ராஜ ரர்ஜேஸ்வரியாக வீற்றிருந்து காக்கிறுள் என்பது யாவரும் அறிந்ததே!

உருவமில்லாத பகவானே நமக்கு உணர்த்தவே ஒலி வடிவான வேதங்களும், மந்த்ர சாஸ்திரங்களும் தோன்றி உள்ளன. ரிஷிகளும், ஞானிகளும், தங்களது ஞான ஒளியால், நமக்கு ஏராளமான மந்த்ரங்களே அளித்துள்ள போதும் “கலௌ சண்டி விநாயகௌ” என்பதற்கேற்ப இக் கலியில் மஹாகணபதி மந்திரமும் ஸ்ரீ சண்டி ப்ரீதிகரமான நவாக்ஷரி மந்திரமும் உடனே நல்ல பலனே கொடுப்பதாக அமைந்துள்ளது.

அந்த நல்லெண்ணத்தில் தான் அம்பிகையின் அருளால் ஸ்ரீ வித்யோபசகரான நஜன் என்ற நடராஜன் அவர்கள் ஆச்சாள் புரம் திரு. கோவிந்தராஜ பிள்ளேயின் முயற்சியால் ஸ்ரீ தேவி சப்த ஸதி மூல மந்திரம் அடங்கிய ஸ்ரீ சண்டி சப்த ஸதி ஹோம விதான பாராயண கிரமத்துடன் எழுதி ஸகல பாபமும் விலகிட இந்த சரத் கால சாரதா நவராத்ரி சமயத்தில் பக்தர்களின் நலனுக்காகவெளியிட விரும்பியதை எண்ணி மிகவும் சந்தோஷித்து இதே மாதிரி திரு. நஜன் (நடராஜன்) அவர்கள் மென்மேலும் இது போன்ற காரியங்களேயும் ஆஸ்தீகத் தொண்டுகளேயும் புரிந்து என்றும் சிறந்து விராஜிக்க நாராயண ஸ்மரணம் செய்து ஆசீர்வதிக்கிறோம்.

மூகாம் : சென்னே<br>
நாள் : காளயுக்தி வருஷம்<br>
பாத்ரபத-சுக்லபக்ஷ<br>
“சதுர்த்தி”

நாராயண ஸ்மரணம்

## ஸ்ரீ காசி மடம் திருப்பனந்தாள் ஆதீனகர்த்தர்
## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
## முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள்

# மு க வு ரை

மனித வாழ்வில் இன்றியமையாது வேண்டப்படுவது அறிவும் பொருளும் வீரமும் ஆகும். அம் முப்பொருள்களையும் வழங்கும் தெய்வங்களைப் பெண் வடிவில் வைத்து வழிபடுதல் நம் பண்டையோர் மரபாகும். அறிவை வழங்கும் தெய்வம் கலைமகள் ஆகும். பொருளை வழங்கும் தெய்வம் திருமகள் ஆகும். வீரத்தை வழங்கும் தெய்வம் கொற்றவை எனப்பெறும் துர்க்கை ஆகும். இம் முத்தெய்வங்களையும் தனித்தனியாக வைத்து வழிபடுவதுடன் ஒருங்குகூட்டி வழிபடுவதும் நம் மரபிற்குரியதேயாகும். அத்தகைய தெய்வமே சண்டி.

இந்த இறைவியை மந்திர வகையால் போற்றியும், ஓம வேள்வியால் வழிபட்டும் நம் முன்னோர்கள் தமக்கு வேண்டிய நலங்களைப் பெற்று வந்தனர். அந்நெறி முறைகளை விளக்குவதே இந்நூலாகும்.

சண்டி சப்த சதி பூஜா அவண விதானம் என்பது இந்நூலின் பெயராகும். சண்டி என்பது தெய்வத்தின் பெயர். சப்த சதி என்பது அவ்வன்னையைப் பாராட்டிப் போற்றும் எழுநூறு மந்திங்களாகும். பூஜா என்பது வழிபாட்டு நெறியையும், அவணம் என்பது ஓம வேள்வியால் வழிபடும் முறையையும் விளக்குவதாகும். விதானம் என்பது நெறிமுறைகள் என்ற பொருளைக் குறிப்பதாகும். எனவே சண்டி என்னும் இறைவியை நாளும் வழிபட்டுப் போற்றும் நெறியையும், ஓம வேள்வியால் போற்றி வழிபடும் நெறியையும் இந்நூல் விளக்க எழுந்தது எனலாம்.

இவ்வரிய நூல் வெளிவருவதற்குக் காரணமாக இருக்கும் அன்பர்கள் திரு. வி. கோவிந்தராச பிள்ளை அவர்களும், திரு. எம். நடராச பிள்ளை அவர்களும் ஆவர். இவ்விருவரும் தருமைக் கயிலைக் குரு மகா சன்னிதானம் அவர்களிடத்துப் பக்தி கொண்டவர்கள். கயிலைக் குருமகாசன்னிதானம் அவர்கள் பெரிதும் போற்றி வந்த சண்டியாம் அன்னையிடத்தும் பெரும் பக்தி பூண்டவர்கள் ஆவர். தருமைக் கயிலைக் குருமகாசன்னிதானம் அவர்களிடத்து உபதேசம் பெற்ற நன்மாணுக்கர்களும் ஆவர். அத்தகைய குருபக்தி மிகுதியால் இந்நூல் தருமைக் கயிலைக் குருமகா சன்னிதானம் அவர்களுக்குக் காணிக்கையாக்கப் பெறுகிறது. இது மிகவும் பொருத்தம் உடையதாகும்.

இதை அனுஷ்டித்து இந்நூல் இத்தகைய முறையில் வெளிவர வேண்டும் என எண்ணிய நம் அன்பர் திரு. வி. கோவிந்தராசபிள்ளை அவர்களுக்கும், இந்நூல் வெளிவருவதற்குத் துணைநின்றும் பொருள் வழங்கியும் உதவிய நம் அன்பர் டாக்டர் திரு. எம். நடராச பிள்ளை அவர்களுக்கும், தக்க விளக்கங்களுடன் பதிப்பித்து வெளியிடும் நம் அன்பர் திரு. நடராசன் (நஜன்) அவர்கட்கும் நம் பாராட்டும் வாழ்த்தும் உரியனவாகும்.

இந்நூலை ஏற்றிப் போற்றி வழிபடும் அன்பர்கள், அனைவருக்கும் இம்மை மறுமை வீடுபேறு ஆகிய நலங்கள் அனைத்தும் பெருகி வளர்வதாகுக. திருவருள் முன்னிற்பதாகுக.

சிவசிவ

# அஷ்ட தசபுஜ ஸ்ரீ மஹா லக்ஷ்மி



### தியானம்

அக்ஷ ஸ்ருக் பரஸும் கதேஷு குலிஶம் பத்மம் தனுஷ்குண்டிகாம்
தண்டம் ஶக்திமஸிம் ச சர்ம ஜலஜம் கண்டாம் ஸுரா பாஜனம் |
ஶூலம் பாச ஸுதர்ஶனே ச தததீம் ஹஸ்தை: ப்ரவாளப் பிரபாம்
ஸேவே ஸைரிப மர்தினீ மிஹ மஹாலக்ஷ்மீம் ஸரோஜ ஸ்திதாம் ||

ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்

ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீட ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் அனுக்ரகித்து ஸ்ரீமுகம் வழங்கியது. சாஸ்த்ரோக்தமாக தயார் செய்யப்பட்டது.

**பூஜையில் வைக்கும் ஸ்ரீ மகா மேரு, ஸ்ரீசக்ரங்கள்.**

ஸ்ரீ மகா மேரு (பஞ்சலோகம்) 2½" × 2½" விலை ரூ. 325/-

ஸ்ரீ சக்ரம் (பஞ்சலோகம்) 2" × 2" விலை ரூ. 75/-

ஸ்ரீ சக்ரம் (காப்பர்) 3" × 3 விலை ரூ. 35/

**மகான் ஸ்ரீ தத்தாத்ரேயர் அவர்களால் உருவாக்கப்பட்ட கண்திருஷ்டி மகா சக்ரம்:** வீடு, வியாபார ஸ்தலம், தொழிற் கூடம் இவைகளில் வைத்தால் வியாபார விருத்தியும் உண்டாகும். மேலும் பிறரால் ஏற்படும் தொல்லைகள், எதிர்ப்புகள் ஆகியவற்றை முறியடிக்கக் கூடியது. பஸ், லாரி, ஸ்கூட்டர் இவைகளில் வைத்தால் விபத்துக்கள் நேரிடாமல் பாதுகாக்க வல்லது. இதன் விலை ரூ. 30-00.

**உடலில் அணியும் வெள்ளி டாலர்**

ஒருபுறம் சக்ரம் மறுபுறம் தத்தாத்ரேயர் உருவம் பொறிக்கப்பட்டது. இதன் விலை ரூ. 25-00.

**விவாக பிராப்தி டாலர்:** நீண்ட நாட்களாக தடை ஏற்பட்டு இருக்கும் பெண்களுக்கோ, ஆண்களுக்கோ, இதை அணிந்த 108 நாட்களுக்குள் விவாகம் நடக்க வல்லது. நட்சத்திரம் எழுதி அனுப்பினால் பூஜையில் வைத்து பிரசாதத்துடன் டாலர் அனுப்பப்படும். இதன் விலை ரூ. 30-00. மற்றும் இதர சாதனங்கள் தேவைப்படுவோர் எங்களது கேட்லாக்கை இலவசமாக பெற்று பயன் அடையலாம்.

விலாசம் : **விஸ்வகர்மக்ஞ S. T. முருகபூஷணம்**

**நவசக்தி நிலையம்**

96/1, லாயிட்ஸ் சாலை, ஸ்டேட் பாங்க் எதிரில் (கோபாலபுரம்)
சென்னை-600086. (போன் : 812013)

எங்கள் லட்சியம் : லோகா சமஸ்தாஸ்சுகினோ பவந்து

1

# ஸ்ரீ சண்டி சப்த சதி

லக்ஷ்மி ப்ரதான ஸமயே நவ வித்ருமாபாம்
வித்யா ப்ரதான ஸமயே சரதிந்து ஸுப்ராம் ।
வித்வேஷி வர்க்க விஜயேஹி தமால நீலாம்
தேவிம் த்ரிலோக ஜனனீம் சரணம் ப்ரபத்யே ॥

மனிதப் பிறவி கிடைப்பது அரிது, அப்பிறப்பும் கல்வி, செல்வம், சக்தி இம்மூன்றும் இல்லையேல் சிறக்காது; வாழ்க்கை சுவைக்காது. ஆகவே இம் மூன்றையும் பெற அன்னையே உன்னை சரணமடைகிறேன். இம் மூன்றையும் பெற உள்ள வழி அம்பிகை உபாசனை தான்.

தேவி உபாசனைக்குரிய நூல்கள் பலவற்றுள் சிறந்து விளங்குவது ''சண்டி சப்த சதி.'' 700 மந்திரங்கள் கொண்டது இது. மகரிஷி மார்க்கண்டேயரால் உபதேசிக்கப்பட்டது.

இதில் அடங்கியுள்ள ஒவ்வொரு சொல்லும் சக்தி வாய்ந்த மந்திரமாகப் போற்றப்பட்டு வருகிறது. காரணம்; கல்பக விருக்ஷம் போன்ற இந்த சப்த சதியை அண்டி அவரவர்கள் விரும்பிய பலனை அடைந்து வருவது தான்.

பதின்மூன்று அத்யாயங்களைக் கொண்ட இது பிரதம சரிதம், மத்யம சரிதம், உத்தம சரிதம் என மூன்று பகுதிகள் கொண்டது.

மதுகைடபர் வதத்தை வர்ணிக்கும் முதல் அத்யாயம் பிரதம சரிதம். ஸ்ரீ மகா காளியின் ப்ரீதிக்காகவும், தர்ம ஸித்திக்காகவும் இப்பாராயணம் விதிக்கப்பட்டுள்ளது.

அத்யாயங்கள், 2, 3, 4 கொண்டது மத்யம சரிதம், மகிஷாசுர வதத்தைக் கூறும். இந்த மத்யம சரித பாராயணத்தால் ஸ்ரீ மகாலக்ஷ்மியின் பொருளும், அருளும் கிடைக்கும்.

ஐந்தாவது அத்யாயம் முதல் 13-வது அத்யாயம் வரை ஒன்பது அத்யாயங்களைக் கொண்டது உத்தம சரிதம். இதன் பாராயணம் ஸ்ரீ மகா சரஸ்வதியின் ப்ரீதிக்காகவும், எல்லா விருப்பங்களின் ஸித்திக்காகவும் விதிக்கப்பட்டுள்ளது.

இம்மூன்று சரிதங்களும் முறையே ரிக், யஜுர், சாம வேத ஸ்வரூபங்கள், அக்னி, வாயு, சூரியன் என்ற மூன்று தத்துவங்களைக் கொண்டது.

இதைப் பாராயணம் செய்வதால் மூன்று வேதங்களைப் பாராயணம் செய்யும் பயன்களும் இகத்திலும் பரத்திலும் ஒருவன் அடைய விரும்பும் எல்லாவித பயன்களும் ஸித்திக்கின்றன.

ப்ரவித்தி மார்க்கத்தில் மன்வந்திரத்திற்கு அதிபதியாக இருப்பதைவிட வேறு சிறந்த இன்பமில்லை. நிவிருத்தி மார்க்கத்தில் பேரின்பமாகிற மோக்ஷத்தை விட வேறொன்றும் சிறந்தது அல்ல. இந்த இரண்டையும் அளிக்கவல்லது சப்தசதி என்பது சுரதன் என்ற அரசனும், சமாதி என்கிற வைச்யனும் பெற்ற பேறுகளி லிருந்து தெரிகின்றது.

குரு முகமாக நவாக்ஷரீ மகா மந்திரத்தை உபதேசம் பெற்று சப்தசதீ பாராயணம், ஹோமம் முதலியவற்றிற்கு உரிய சில முறைகளை அறிந்து அதன் மூலம் தேவியை உபாசித்து வந்தால் அந்த உபாசகன், அவனை சேர்ந்தவர்கள் மட்டுமல்ல அவன் வாழும் நாடே துன்பங்கள் நீங்கி இன்பம் பெறும்.

இந்நூல் 12-வது அத்யாயத்தில் இந்த சப்த சதியால் விளை யும் பலன்களைத் தேவியே எடுத்துரைக்கிறாள்.

இதற்கு ஸ்ரீ பாஸ்கரராயர் முதலியப் பெரியவர்கள் விரிவான உரை எழுதியிருக்கின்றனர். சௌந்தரியலஹரிக்கு உரை எழுதி யுள்ள ஸ்ரீ லக்ஷ்மீதரர் 'அனுஷ்டான சுதார்ணவம்' என்ற நூலில் சப்த சதி ஜபம், ஹோமம், ரக்ஷாதாரணம் முதலியவற்றை விளக்கியிருக்கிறார்.

ஏழு சதிகளின் சரித்திரம் என்பதால் சப்த சதி என்னும் சொல்லப்படுகிறது. இந்த ஏழு சதி யார் என்பதில் அபிப்பிராய பேதம் இருக்கிறது.

(1) பிராஹ்மி (2) மாகேஸ்வரி
(3) வாராஹி (4) கௌமாரி
(5) வைஷ்ணவி (6) இந்திராணி
(7) சாமுண்டா என்ற சப்த மாத்ருக்கள் என்கின்றவர் சிலர்.

(1) நந்தா, (2) சாகம்பரீ, (3) பீமா, (4) ரக்த தந்திகா (5) துர்க்கா, (6) பிராமரீ, (7) சதாக்ஷீ இவர்கள் என்கின்ற னர் இன்னும் சிலர்.

ஸ்ரீபாஸ்கரராயர் தன் குப்தவதீ பாஷ்யத்தில் இதை பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

கவசார்கலே ச கீலக மாதௌ மத்யே திரயோதசாத்யாயீ ।
அந்தே ப்ராதானிக வைக்ருதிகே மூர்த்தித்ரயம் ரஹஸ்யா நாம்

இனி நூலுக்குள் பிரவேசிப்போம்.

## சப்த சதி விளக்கம்

''ஏண்டா! சண்டி பண்றே! பேசாமல் வந்து சாப்பிட்டு விட்டுப் போடா!;—இது பெற்ற அன்னையின் குரல்.

இந்த இடத்தில் 'சண்டி' என்பது, ''ஏன் பிடிவாதம் பிடிக்கிறே'' என்ற அர்த்தத்தில் உபயோகப்பட்டுள்ளது. லோக மாதாவான ஜகதம்பிகையும், ''நான் கெட்டுத்தான் போவேன்'' என்பவனையும் நல்வழிப்படுத்த பிடிவாதம் பிடிக்கிறாள். அதனாலேயே 'சண்டி' என்ற பெயர் அவளுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும்.

இவள் கணவரான ஈஸ்வரனே அன்பை நம்மிடமிருந்து யாசித்துப் பெற கப்பரையையே எடுத்துக் கொண்டு பிச்சை வாங்க வந்துவிட்டார். இந்த அன்னையும் நம்மை விடமாட்டாள் போலிருக்கு. இப்படி அம்மையும், அப்பனும் அவர்கள் படைத்த நம்மிடம் காட்டும் இந்த கருணைக்கு நாம் எப்படி நன்றி செலுத்துவது?

மகன் கோபித்துக்கொண்டு வீட்டை விட்டுப் போய்விட்டால் அந்த தாயுள்ளம் என்ன பாடுபடுகிறது? தந்தை வெளிப்படையாகத் தன் துயரத்தைக் காட்டாமல் வீறுப்பு பேசினாலும் உள்ளூர குமைந்து மாய்கிறார். இம்மாதிரியே இறைவனும் இறைவியும் நாம் கடைத்தேற நமக்கு எவ்வளவோ சந்தர்ப்பங்களை அளிக்கிறார்கள்.

மனைவியும் மக்களும் சமாதி* என்ற வைசியனை வீட்டைவிட்டு துரத்திவிட்டார்கள். அப்படியிருந்தும் 'அவர்கள் எப்படி இருக்கிறார்களோ? என்ன கஷ்டப்படுகிறார்களோ?' என்று வைசியன் அனுவசியமாக தன்னை அலட்டிக் கொள்கிறான்.

சுரதன்** என்ற அரசனை பகையரசன் வென்று ராஜ்யத்தை விட்டு விரட்டிவிட்டான்.

காட்டிற்கு வந்த சுரதன் நிம்மதியாக இருக்கக்கூடாதோ! குடிமக்கள் எப்படி பகை அரசன் கொடுமைகளில் வாழ்கிறார்களோ? நம் குதிரைகள் நாம் இல்லாமல் எப்படி கஷ்டப்படுகிறதோ?—இம்மாதிரி கவலை அவனுக்கு.

---

* இந்த சமாதி ஒருமுனைப்பட்ட மனத்தினன். இகத்தில் காணாத இன்பத்தை பரத்தில் தேட பாடுபட்டவன். அம்பிகை அருளால் அதை அடைந்தவன்.

** சுரதன் இம்மானிட வாழ்வில் உண்மையைக் காண அதற்கேற்ற வசதிகளுடன் பிறந்தவன். இகத்தில் மேலான பதவியை (மநு) அம்பிகை அருளால் அடைந்தவன்.

இவ்விருவரும் உண்மை அடையப் பாடுபடும் மானிட வர்க்கத்தின் பிரதிநிதிகள்.

கல் மனப் பிள்ளையின் செயலுக்கு பெற்றோர்கள் வருந்துவதேன்? விரட்டிவிட்ட மனைவியிடம் கணவனுக்கு பரிவு ஏன்? கைவிட்டுப்போன ராஜ்யத்தைப்பற்றி அரசனுக்குக் கவலை ஏன்?

இதற்கு சுமேதஸ் என்ற மகரிஷி பதில் சொல்கிறார்.

''இதில் என்ன ஆச்சர்யம்? இவ்வுலக வாழ்வை நடத்தி வைப்பதற்காக மஹாமாயை தன் பிரபாவத்தால் இப்படி மானிடர்களுக்கு பற்றுதலை ஏற்படுத்துகிறாள். இது பகவானின் யோக நித்ராதேவியான மஹா மாயையின் செயல்.

ஞானிகளையும் வலுவிலே இழுத்து மயக்கும் மாயை அவள். சராசரமான இவ்வுலகம் அவளாலேயே ஆக்கப்பட்டிருக்கிறது. அவள் நினைத்தால் அவளே மனிதருக்கு இந்த மாயையிலிருந்து விடுதலை அளிப்பாள். சம்சாரக் கட்டுக்கு மூலமான எல்லாம் வல்ல அந்த ஈஸ்வரியே, முக்திக்கு காரணமான ஞான வித்யை.''

## எங்கிருந்து வந்தது இம்மாயை?

இரண்டற்று ஒன்றாகி இருந்த பிரும்மம் தன் தனிமை தாங்காது இரண்டாகி அதன் மூலம் பலவற்றாய் தன்னைப் பெருக்கிக் கொண்டது.

இந்த இரண்டாவதாக பிரும்மத்திற்குத் தன்னிடமே உண்டானதே மாயை.

''மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத் மாயினம் து மகேஸ்வரம்.''

என்று வேதம் சொல்வது போல பரம்பொருளின் சக்தியாய் வாய்த்த இந்த மாயையே உலகனைத்திற்கும் மூலமாயிற்று.

ஆக்குவதும், காப்பதும், அழிப்பதுமான முத்தொழில்களையும் தன் முக்குணங்களான சத்வ, ரஜஸ், தமஸ் இவைகளால் நடத்தி வைக்கும் சக்தி இவளே. இவளே மகா சரஸ்வதி, மகாகாளி, மகாலக்ஷ்மி எனப்படுகிறாள். இம் மூன்று தத்துவங்களும் ஒன்று சேர்ந்ததே சண்டி, சாமுண்டீஸ்வரி* என்பது.

நம்மை இப்பிரபஞ்சத்தில் சிக்கி மாட்டிவைத்த அம்மாயா சக்தியேதான் நம்மை அதிலிருந்து மீள்வதற்கு உதவ வேண்டும். நம் அக்ஞானத்திற்கு ஆதாரமான மாயையே ஞானத்திற்கும் ஆதாரமானவள். கட்டுவதும் அவளே, விடுவிப்பதும் அவளே. அவளை வழிபட்டே அவளைக் கடக்கவேண்டும்.

இதை விளக்கவே வந்தது ''சப்தசதி'' என்ற தேவி மகாத்மியம். சுரதன் என்ற ராஜா, சமாதி என்ற வைசியன் இவர்கள்

---

* பிரதிபா பிரசுரம் ''ஸ்ரீ துர்க்கா பரமேஸ்வரி''யில் சப்த சதி சக்தி ஸ்வரூபிணிகள் அவ்வளவு பேர்களைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.

மேதஸ் என்ற ரிஷியிடம் தங்கள் குறைகளைத் தெரிவித்து ஞானோப தேசம் பெறுகிறார்கள்.

மேதஸ் என்பது ஞானம். (இவர்தான் ரிஷி)

ரதம் என்றால் நம் சரீரம். ''ஆத்மானம் ரதினம் வித்தி சரீரம் ரதமேவச'' என்று வேதம் குறிப்பிடுகிறது. சுரதன் இந்த சரீரத்தில் கட்டுண்ட ஜீவன். (இவன்தான் அந்த அரசன்).

சமாதி என்பது சித்தத்தின் ஏகாக்ரக நிலையைக் குறிக்கும். இந்த சித்த நிலையே ஞான சாதனம்.

இந்த யோக நிலையையும், ஜீவாத்மாவையும், பிரபஞ்சப் பற்று, அகங்கார, மமகார பந்தங்கள், ராகம், மோகம், துக்கம் இவற்றில் அழுத்தி வைப்பது மாயை (இந்த சமாதியே வைசியன்).

அம்பிகையே தேவி ஸூக்தத்தில், ''எவனை நான் விரும்பினேனோ அவனை மிகப் பெரியவனுக்குவேன். அவனை மேதையாக்குவேன், ரிஷியாயும், ஸுமேதனுகவும் செய்வேன்'' என்று சொல்கிறாள்.

மாயையிலிருந்து விடுபட அம்பிகையின் அருள் வேண்டும். அவளை வழிபடும் சாதனங்களில் தேவி மகாத்மியம் சிறந்து விளங்குவதாகும்.

சண்டி சப்த சதிக்கு துர்க்கா சப்த சதி என்றும் பெயர். துர்க்கா என்றால் அணுகுவதற்கு அரியவள் என்றும் அர்த்தம். துர்க்கதி அடையாமல் நம்மைக் காப்பாற்றுபவள் என்றும் பொருள்படும்.

''யதா வேதோ ஹ்ய நாதிர் ஹி
தத்வத் ஸப்த ஶதீ ஸ்ம்ருதா''

வேதம் போல சப்த சதி அபௌருஷேயம். ஒருவர் எழுதியதல்ல. ஆவேச வாக்கு. ரிக் வேதத்திலுள்ள வாக் ஆம்ருணீயின் தர்சனமான தேவி ஸூக்தமே இதன் மூலம். நவாக்ஷரி மந்திரமே சப்த சதியின் ஒரு அங்கமாகவே விளங்குகிறது.

''ஏகைவாஹம் ஜகத் யத்ர த்விதீயா கா மமாப்ரா''

''உலகில் நான் ஒருவளே உள்ளேன். என்னைத் தவிர இரண்டாமவர் இங்கு கிடையாது'' என்ற பரமாத்மா ஸ்வரூபத்தை அம்பிகை எவ்வாறு போதிக்கின்றாள் என்பதை । உணர்த்துவதால் இதற்கு தேவி மகாத்மியம் என்று பெயர். சண்டியின் மகாத்மியமானதால் சண்டி பாடம் என்பர். சுருக்கமாக சண்டி என்றே வழங்குவர். அம்பிகையின் சாந்த சக்தி லலிதா உக்கிரக சக்தி சண்டி.

700 சுலோகங்கள் கொண்டதால் சப்த சதி.

''வாக்யார்த்தை ச் ச பத்யைச் ச
ஸப்த ஶக்யாத்மகம் சுபம்'' என்கிறது ருத்ரயாமளம்.

# சப்த சதி பூர்வாங்கம்

சப்த சதியை ஜபிக்க சில அங்கங்கள் நியமங்கள் உண்டு. மந்தமான ஸ்வரத்தில் (பாட்டாக இன்றி) சப்த சதி பாராயணம் செய்யப்பட வேண்டும்.

இந்த ஜப பாராயணத்திற்கு முன்னல் செய்யும் அங்கங்கள் பூர்வாங்கம் என்றும், மூன்று சரிதங்களுக்கு பின்னல் செய்யப் படும் அங்கங்கள் உத்தராங்கம் என்றும் சொல்லப்படும்.

கவசம், அர்க்கலம், கீலகம், ராத்ரீ ஸூக்தம், நவாக்ஷரி, சப்த சதியின் அங்கன்யாஸம், கரன்நியாஸம் இவை பூர்வாங்கம்,

பின் சப்த சதி மூன்று சரிதம் பாராயணம்.

அதன்பின் சப்த சதியின் ஹிருதயாதி நியாஸம், நவாக்ஷரீ, தேவீ ஸூக்தம், ரகஸ்யத்ரயம், ஜப நிவேதனம் இவை உத்ராங்கம்.

## கவசம்

போர்வீரன் அணியும் கவசம் போல மந்திரங்கள் சாதக னுக்குக் கவசமாக விளங்குகிறது. பிணி, மூப்பு, பேய், பிசாசு, தீய சக்திகள் இவைகள் நம்மை அண்டாமல் காக்க பல தேவதைகள் துதிக்கப்படுகின்றனர்.

இதில் பத்து திக்கு அதிபர்களின் சக்திகள், சப்த மாத்ரு கைகள் பல இடங்களில் பல திருக் கோலங்களுடன் விளங்கும் சக்திகள் இவர்களே அழைத்து நம் புற உருப்புகள்,அக உருப்புகள், பிராணன், வாயுக்கள், மனேவி, மக்கள், பொன், பொருள், வழி யாவற்றையும் எக்காலத்திலும் காக்க வேண்டும் என்று பிரார்த் திக்கப்படுகிறது. இது சப்த சதியின் முதல் அங்கம். இந்த தேவி கவசத்தை பிரும்மா மார்க்கண்டேய முனிவருக்கு உபதேசித்திருக் கிருர். இந்த கவசம் சொல்லப்பட்ட பின்பே பாராயணம் செய்ய வேண்டும்.

நியாஸம் : அஸ்ய ஸ்ரீ தேவி கவச ஸ்தோத்திர மஹா மந்திரஸ்ய பிரும்மா ரிஷி : அனுஷ்டுப் சந்த : ஸ்ரீ மகாலக்ஷ்மி தேவதா ॥

ஹ்ராம் பீஜம், ஹ்ரீம் சக்தி : ஹ்ரூம் கீலகம் ஸ்ரீ மகாலக்ஷ்மி பிரசாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக : ‖

(கவசம் பாராயணம் செய்யவும்)

''கவசம் பீஜமாதிஷ்ட அர்க்கிலா சக்தி ருச்யதே கீலகம் கீலகம் பாஹு : சப்தசத்யா மஹா மனோ : ‖ ''

எல்லா மந்திரங்களுக்கும் பீஜமும், சக்தியும், கீலகமும் எப்படி முதலில் சிந்திக்கப்பட வேண்டுமோ அப்படி சப்தசதீ மகா மந்திரத்திற்கு கவசமே பீஜம், அர்க்கலமே சக்தி, கீலகமே கீலகமாக பாவிக்கப்படவேண்டும்.

## கவசம்

மார்க்கண்டேய உவாச—
யத் குஹ்யம் பரமம் லோகே ஸர்வ-ரக்ஷாகரம் ந்ருணும் |
யந்ந கஸ்யசிதாக்யதம் தன்மே ப்ரூஹி பிதாமஹ ‖ 1

ப்ரஹ்மோவாச—
அஸ்தி குஹ்யதமம் விப்ர ஸர்வ பூதோபகாரகம் |
தேவ்யாஸ் து கவசம் புண்யம் தச்ச்ருணுஷ்வ மஹாமுனே ‖ 2

ப்ரதமம் சைலபுத்ரீ ச த்விதீயம் ப்ரஹ்மசாரிணீ |
த்ருதீயம் சந்த்ரகண்டேதி கூஷ்மாண்டேதி சதுர்த்தகம் ‖ 3

பஞ்சமம் ஸ்கந்தமாதேதி ஷஷ்டம் காத்யாயனீதி ச |
ஸப்தமம் காலராத்ரீதி மஹாகௌரீதி சாஷ்டமம் ‖ 4

நவமம் ஸித்திதா ப்ரோக்தா நவதுர்க்கா : ப்ரகீர்த்திதா : |
உக்தான்-யேதானி நாமானி ப்ரஹ்மணைவ மஹாத்மனு ‖ 5

அக்னினு தஹ்யமானஸ்து சத்ருமத்யே கதோ ரணே |
விஷமே துர்க்கமே சைவ பயார்த்தா : சரணங் கதா : ‖ 6

ந தேஷாம் ஜாயதே கிஞ்சி-தசுபம் ரணஸங்கடே |
நாபதம் தஸ்ய பச்யந்தி ஸர்வ-து : க்க-க்ஷயங்கரீ ‖ 7

யைஸ்து பக்த்யா ஸ்ம்ருதா நூனம் தேஷாம் ருத்தி : ப்ரஜாயதே |
ப்ரேத-ஸம்ஸ்தா து சாமுண்டா வாராஹீ மஹிஷாஸனு ‖ 8

ஐந்த்ரீ கஜஸமாரூடா வைஷ்ணவீ கருடாஸனு |
மாஹேச்வரீ வ்ருஷாரூடா கௌமாரீ சிகி வாஹனு ‖ 9

ப்ராஹ்மீ ஹம்ஸ-ஸமாரூடா ஸர்வாபரண-பூஷிதா |
நானுபரண-சோபாட்யா நானுரத்னேப-சோபிதா : ‖ 10

த்ருச்யந்தே ரதமாரூடா தேவ்ய : க்ரோத-ஸமாகுலா : |
சங்கம் சக்ரம் கதாம் சக்திம் ஹலஞ்ச முஸலாயுதம் ‖ 11

கேடகம் தோமரஞ் சைவ பரசும் பாசமேவ ச |
குந்தாயுதம் த்ரிசூலஞ் ச சார்ங்காயுத-மனுத்தமம் ‖ 12

தைத்யானும் தேஹநாசாய பக்தானு-மபயாய ச |
தாரயந்த்-யாயுதானீத்தம் தேவானுஞ் ச ஹிதாய வை ‖ 13

மஹாபலே மஹோத்ஸாஹே மஹாபய-விநாசினி |
த்ராஹிமாம் தேவி துஷ்ப்ரேக்ஷ்யே சத்ரூணும் பயவர்த்தினி ‖ 14

ப்ராச்யாம் ரக்ஷது மாமைந்த்ரீ ஆக்னேய்யா-மக்னி தேவதா |
தக்ஷிணேவது வாராஹீ நைர்ருத்யாம் கட்கதாரிணீ ‖ 15

ப்ரதீச்யாம் வாருணீ ரக்ஷேத்-வாயவ்யாம் ம்ருகவாஹினீ |
ரக்ஷே-துதீச்யாம் கௌமாரீ ஈசான்யாம் சூலதாரிணீ ‖ 16

ஊர்த்வம் ப்ரஹ்மாணி மே ரக்ஷே-ததஸ்தாத்-வைஷ்ணவீ ததா |
ஏவம் தசதிசோ ரக்ஷேச்-சாமுண்டா சவ வாஹனு ‖ 17

ஜயா மே சாக்ரத : ஸ்தாது விஜயா ஸ்தாது ப்ருஷ்டத :
அஜிதா வாமபார்ச்வே து தக்ஷிணே சாபராஜிதா ‖ 18

சிகா-முத்யோதினீ ரக்ஷே-துமா மூர்த்னி-வ்யவஸ்திதா |
மாலாதரீ லலாடே ச ப்ருவோ ரக்ஷேத்-யசஸ்வினீ ‖ 19

த்ரிநேத்ரா ச ப்ருவோர்-மத்யே யமகண்டா ச நாஸிகே |
சங்கினீ சக்ஷுஷோர்-மத்யே ச்ரோத்ரயோர்-த்வாரா-வாஸினீ ‖ 20

கபோலௌ காலிகா ரக்ஷேத் கர்ணமூலே து சாங்கரீ |
நாஸிகாயாம் ஸுகந்தா ச உத்தரோஷ்டே ச சர்ச்சிகா ‖ 21

அதரே சாம்ருதகலா ஜிஹ்வாயாஞ் ச சரஸ்வதீ |
தந்தான் ரக்ஷது கௌமாரீ கண்டமத்யே ச சண்டிகா ‖ 22

கண்டிகாம் சித்ரகண்டா ச மஹாமாயா ச தாலுகே |
காமாக்ஷீ சிபுகம் ரக்ஷேத் வாசம் மே ஸர்வமங்கலா ‖ 23

க்ரீவாயாம் பத்ரகாளீ ச ப்ருஷ்டவம்சீ தனுர்த்தரீ |
நீலக்ரீவா பஹிஷ்கண்டே நலிகாம் நலகூபரீ ‖ 24

கட்கதாரிண்யுபௌ ஸ்கந்தௌ பாஹு மே வஜ்ரதாரிணீ |
ஹஸ்தயோர்-தண்டினீ ரக்ஷே-தம்பிகா சாங்குலீஷு ச ‖ 25

நகான் சூலேச்வரீ ரக்ஷேத் கக்ஷௌ ரக்ஷேந்-நலேச்வரீ |
ஸ்தனௌ ரக்ஷேன்-மஹாதேவீ மன : சோக-விநாசினீ ‖ 26

ஹ்ருதயம் லலிதாதேவீ ஹ்யுதரே சூலதாரிணீ |
நாபிஞ்ச காமினீ ரக்ஷேத்-குஹ்யம் குஹ்யேச்வரீ ததா ‖ 27

பூதநாதா ச மேட்ரஞ் ச குதம் மஹிஷவாஹினீ |
கட்யாம் பகவதீ ரக்ஷேஜ்-ஜானுனீ விந்த்யவாஸினீ ‖ 28

ஜங்கே மஹாபலா ரக்ஷேஜ்-ஜானுமத்யே விநாயகீ |
குல்பயோர்-நாரஸிஹ்மீ ச பாதப்ருஷ்டே மிதௌஜஸீ ‖ 29

பாதாங்குலீ : ஶ்ரீதரீ ச பாதாதஸ்தல—வாஸினீ |
நகான் தமஷ்ட்ராகராலீ ச கேசாம்ச்சைவோர்த்வகேசினீ ‖ 30

ரோமகூபேஷு கௌபேரீ த்வசம் வாகீச்வரீ ததா |
ரக்த-மஜ்ஜா-வஸா-மாம்ஸான்-யஸ்தி-மேதாம்ஸி பார்வதீ ‖ 31

அந்த்ராணி காலராத்ரிச்ச பித்தஞ் ச முகுடேச்வரீ |
பத்மாவதீ பத்மகோசே கபே சூடாமணிஸ்-ததா ‖ 32

ஜ்வாலாமுகீ நகஜ்வாலா-மபேத்யா ஸர்வஸந்திஷு |
சுக்ரம் ப்ரஹ்மாணி மே ரக்ஷேச்-சாயாம் சத்ரேச்வரீ ததா ‖ 33

அஹங்காரம் மனோபுத்திம் ரக்ஷ மே தர்மசாரிணி |
ப்ராணாபானௌ ததா வ்யான-ஸமானோதான-மேவ ச ‖ 34

யச : கீர்த்திஞ் ச லக்ஷ்மீஞ் ச ஸதா ரக்ஷது சக்ரிணீ |
கோத்ர-மிந்த்ராணி மே ரக்ஷேத் பசூன்மே ரக்ஷ சண்டிகே ‖ 35

புத்ரான் ரக்ஷேன் மஹாலக்ஷ்மீர்-பார்யாம் ரக்ஷது பைரவீ |
மார்க்கம் க்ஷேமங்கரீ ரக்ஷேத்-விஜயா ஸர்வத : ஸ்திதா ‖ 36

ரக்ஷாஹீனம் து யத் ஸ்தானம் வர்ஜிதம் கவசேன து |
தத் ஸர்வம் ரக்ஷ மே தேவி ஜயந்தீ பாபநாசினீ ‖ 37

பதமேகம் ந கச்சேத் து துதீச்சேச்-சுப-மாத்மன : |
கவசேனாவ்ருதோ நித்யம் யத்ர யத்ர ஹி கச்சதி ‖ 38

தத்ர தத்ரார்த்த-லாபச்ச விஜய : ஸர்வகாமிக : |
யம் யம் சிந்தயதே காமம் தம் தம் ப்ராப்னோதி நிச்சிதம் ‖ 39

பரமைச்வர்ய-மதுலம் ப்ராப்ஸ்யதே பூதலே புமான் |
நிர்ப்பயோ ஜாயதே மர்த்ய : ஸங்க்ராமேஷ்-வபராஜித : ‖ 40

த்ரைலோக்யே து பவேத் பூஜ்ய : கவசேனாவ்ருத : புமான் |
இதம் து தேவ்யா : கவசம் தேவானாமபி துர்லபம் ‖ 41

ய : படேத் ப்ரயதோ நித்யம் த்ரிஸந்த்யம் ச்ரத்தயான்வித : |
தைவீகலா பவேத் தஸ்ய த்ரைலோக்யே சாபராஜித : ‖ 42

ஜீவேத்-வர்ஷசதம் ஸாக்ர-மபம்ருத்யு-விவர்ஜித : |
நச்யந்தி வ்யாதய : ஸர்வே லூதா-விஸ்போடகாதய : ‖ 43

ஸ்தாவரம் ஜங்கமஞ் சாபி க்ருத்ரிமஞ் சாபி யத்-விஷம் |
அபிசாராணி ஸர்வாணி மந்த்ர-யந்த்ராணி பூதலே ‖ 44

பூசரா : கேசராச்சைவ ஜலஜாச்சோப தேசிகா : |
ஸஹஜா : குலஜா மாலா டாகினீ சாகினீ ததா ‖ 45

அந்தரிக்ஷசரா கோரா டாகின்யச்ச மஹாபலா : |
க்ரஹ-பூத-பிசாசாச்ச யக்ஷ-கந்தர்வ-ராக்ஷஸா : || 46

ப்ரஹ்ம ராக்ஷஸ-வேதாளா : கூஷ்மாண்டா பைரவாதய : |
நச்யந்தி தர்சனுத் தஸ்ய கவசே ஹ்ருதி-ஸம்ஸ்திதே || 47

மானேன்னதிர்-பவேத்-ராஜ்ஞஸ்-தேஜோவ்ருத்திகரம் பரம் |
யசஸா வர்த்ததே ஸோபி கீர்த்தி-மண்டித-பூதலே || 48

ஜபேத் ஸப்தசதீம் சண்டீம் க்ருத்வா து கவசம் புரா |
யாவத் பூமண்டலம் தத்தே ஸசைல-வன-கானனம் || 49

தாவத் திஷ்டதி மேதின்யாம் ஸந்ததி : புத்ரபௌத்ரகீ |
தேஹாந்தே பரமம் ஸ்தானம் யத் ஸுரைரபி துர்லபம் || 50

ப்ராப்னோதி புருஷோ நித்யம் மஹாமாயா-ப்ரஸாதத : |

## அர்க்கலம்

காரியம் சித்தி பெற இடையூறுகவுள்ள பாபம் அர்க்கலம் (தாழ்ப்பாள்) போல தடங்கலாக உள்ளது. இந்த இடையூறு நீங்குவதற்காக இது ஸ்துதிக்கப்படுகிறது. இது சிறந்த பிரார்த்தனை சுலோகம்.

நியாஸம் : அஸ்ய ஸ்ரீ அர்க்கலா ஸ்தோத்திர மஹா மந்திரஸ்ய ஸ்வர்ணுகர்ஷண பைரவருஷி : அனுஷ்டுப் சந்த : ஸ்ரீ மஹாலக்ஷ்மீ சண்டிகா தேவதா ||

அம் பீஜம் கம் சக்தி : லம் கீலகம் ஸ்ரீ மஹாலக்ஷ்மி சண்டிகா ப்ரஸாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக : ||

### ரூபம் தேஹி ஸ்துதி

ஜயந்தீ மங்கலா காலீ பத்ர காலீ கபாலினீ
துர்கா க்ஷமா சிவா தாத்ரீ ஸ்வாஹா ஸ்வதா நமோஸ்துதே || 1

மதுகைடப வித்ராவி விதாத்ரு வரதே நம :
ரூபம் தேஹி ஜயம் தேஹி யசோ தேஹி த்விஷோ ஜஹி || * 2

மஹிஷாசுர நிர்நாச விதாத்ரி வரதே நம —ரூபம் 3
வந்தி தாங்கரியுகே தேவி தேவ சௌபாக்ய தாயினி--ரூபம் 4
ரக்த பீஜவதே தேவி சண்ட முண்ட விநாசினி —ரூபம் 5
அசிந்த்ய ரூப சரிதே ஸர்வ சத்ரு விநாசினி —ரூபம் 6

---

* எனக்கு ரூபம் அளிப்பாய்; வெற்றியை அளிப்பாய்; கீர்த்தியை அளிப்பாய்; சத்ருக்களை அழிப்பாய்.

நதேப்ய: ஸர்வதா பக்த்யா சண்டிகே ப்ரணதாயமே-ரூபம் 7
ஸ்துவத்ப்யோ பக்தி பூர்வம் த்வாம்
சண்டிகே வ்யாதி நாசினி—ரூபம் 8
சண்டிகே ஸததம் யேத்வாமர்ச்சயந்தீஹ பக்தித :—ரூபம் 9
தேஹி ஸௌபாக்ய மாரோக்யம்
தேஹி தேவி பரம் ஸுகம்—ரூபம் 10
விதேஹி த்விஷதாம் நாசம் விதேஹி பல முச்சகை—ரூபம் 11
விதேஹி தேவி கல்யாணம் விதேஹி விபுலாம் ச்ரியம்—ரூபம் 12
வித்யா வந்தம் யசஸ்வந்தம் லக்ஷ்மி வந்தம் ஜனம்குரு—ரூபம் 13
ப்ரசண்ட தைத்ய தர்ப்பக்னே சண்டிகே ப்ரணதாயமே—ரூபம் 14
சதுர்புஜே சதுர் வக்த்ர ஸம்ஸ்துதே பரமேஸ்வரீ—ரூபம் 15
க்ருஷ்ணேன ஸம்ஸ்துதே தேவி
சச்வத் பக்த்யா ததாம்பிகே—ரூபம் 16
ஹி மா சல ஸுதா நாத பூஜிதே பரமேஸ்வரி —ரூபம் 17
ஸுராஸுர சிரோரத்ன நிக்ருஷ்ட சரணேம்பிகே —ரூபம் 18
இந்திராணீபதி ஸத்பாவ பூஜிதே பரமேஸ்வரி —ரூபம் 19
தேவி ப்ரசண்ட தோர் தண்ட
தைத்ய தர்ப்ப விநாசினி—ரூபம் 20
தேவி பக்த ஜனோத்தாம தத்தாணந்தோதயம்பிகே-ரூபம் 21
பத்னீம் மனோரமாம் தேஹி மனோ விருத்தானு ஸாரிணீம் 22

தாரிணிம் துர்க்க ஸம்ஸார ஸாகரஸ்ய குலோத் பவாம் ॥ 23
இதம் ஸ்தோத்திரம் படித்வாது மஹா ஸ்தோத்ரம் படேந் நர:
ஸ து ஸப்தசதீ சங்க்யா வர மாப்னோதி ஸம்பவ : ॥

இந்த ஸ்தோத்திரத்தைப் படித்துவிட்டு மஹா ஸ்தோத்திர மாகிய தேவி மகாத்மியத்தைப் படிக்கவேண்டும். இது சப்த சதி பாராயணத்தில் அடங்கியது. இதனால் சிறந்த பலன் கைகூடும்.

## கீலகம்

கொடுத்துப் பெறுதல் கீலகம் எனப்படும். சகல சொத்துக்களை யும் தேவியிடம் சமர்பித்துவிட்டு பின் அப்பொருளை தன் வாழ்க் கைக்கும், நற்பணிகளுக்கும், தெய்வ வழிபாட்டிற்கும் செலவிட வேண்டும். இப்படிச் செய்வதால் தேவி பரம சந்தோஷமடை கிறாள்.

உபாசகன் தன்னால் நியாயமான வழியில் அடையப்பட்ட தனத்தைத் தேவிக்கு அர்ப்பணம் செய்து ஏகாக்கிரக சித்தனாகத் தன்னைப் பாவிக்க வேண்டும். இது தான் நிஷ்கீலனம் அல்லது சாபோத்தாரம்.

நியாஸம் : அஸ்ய ஸ்ரீ கீலக ஸ்தோத்திர மஹா மந்திரஸ்ய விசுத்தக்ஞான ரிஷி : அனுஷ்டுப் சந்த : ஸ்ரீ சண்டிகா தேவதா ॥

ஸாம் பீஜம்; க்லீம் சக்தி; க்லூம் கீலகம் ஶ்ரீ சண்டிகா ப்ரஸாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக:

விசுத்த ஞானமே சரீரமாகவும், மூன்று வேதங்கள் முக்கண்ணு யும், பாதி சந்திரனைத் தலையில் அணிந்துள்ள பரமசிவனுக்கு நமஸ்காரம் என்று இது ஆரம்பமாகிறது. இது பரிபூர்ண பலனை அளிப்பது. இந்த நிஷ்கீலக முறையை அறிந்துக்கொண்டு சப்த சதீ பாடத்தை ஆரம்பிக்க வேண்டும்.

## கீலகம்

விசுத்தஜ்ஞான-தேஹாய த்ரிவேதீ-திவ்ய-சக்ஷுஷே |
ச்ரேய:-ப்ராப்தி-நிமித்தாய நம: ஸோமார்த்த-தாரிணே || 1

ஸர்வமேதத்-விஜயாநீயான்-மந்த்ராணு-மபி-கீலகம் |
ஸோபி க்ஷேம-மவாப்னோதி ஸததம் ஜாப்ய-தத்பர: 2

ஸித்த்யந்த்-யுச்சாடனாதீனி வஸ்தூனி ஸகலான்யபி |
ஏதேன ஸ்துவதாம் தேவீ ஸ்தோத்ர-மாத்ரேண ஸித்யதி || 3

ந மந்த்ரேர் நெளஷதம் தத்ர நி கிஞ்சிதபி வித்யதே |
விநா ஜாப்யேன ஸித்யேத ஸர்வ-முச்சாடனாதிகம் || 4

ஸமக்ராண்யபி ஸேத்ஸியந்தி லோகசங்கா-மிமாம் ஹர: ||
க்ருத்வா நிமந்த்ரயாமாஸ ஸர்வமேவ-மிதம் சுபம் || 5

ஸ்தோத்ரம் வை சண்டிகாயாஸ்து தச்ச குஹ்யம் சகார ஸ: |
ஸமாப்திர்-ந ச புண்யஸ்ய தாம் யதாவந்-நியந்த்ரணும் || 6

ஸோபி க்ஷேம-மவாப்னோதி ஸர்வமேவ ந ஸம்சய: |
க்ருஷ்ணுயாம் வா சதுர்தச்யா-மஷ்டம்யாம் வா ஸமாஹித: | 7

ததாதி ப்ரதிக்ருஹ்ணுதி நான்யதைஷா ப்ரஸீததி |
இத்தம் ரூபேண கீலேன மஹாதேவேன கீலிதம் || 8

யோ நிஷ்கீலாம் விதாயைனும் நித்யம் ஜபதி ஸம்ஸ்புடம் |
ஸ ஸித்த: ஸ கண: ஸோபி கந்தர்வோ ஜாயதேவனே || 9

நசைவாப்யடதஸ்-தஸ்ய பயம் க்வாபீஹ ஜாயதே |
நால்ப-ம்ருத்பு-வசம் யாதி ம்ருதோ மோக்ஷ-மவாப்னு-யாத் || 10

ஜ்ஞாத்வா ப்ராரப்ய குர்வீத ஹ்யகுர்வாணோ விநச்யதி |
ததோ ஜ்ஞாத்வைவ ஸம்பன்ன-மிதம் ப்ராரப்யதே புதை: || 11

ஸெளபாக்யாதி ச யத்கிஞ்சித்-த்ருச்யதே லலனுஜனே |
தத்ஸர்வம் தத்ப்ரஸாதேன தேன ஜாப்ய-மிதம்-சுபம் 12

சனேஸ்து ஜாப்யமானேஸ்மின் ஸ்தோத்ரே ஸம்பத்திருச்சகை :।
பவத்யேவ ஸமக்ராபி தத: ப்ராரப்யமேவ தத் ॥ 13

ஐச்வர்யம் யத் ப்ரஸாதேன ஸௌபாக்யரோக்ய-ஸம்பத:।
சத்ருஹானி: பரோ மோக்ஷ: ஸ்தூயதே ஸா ந கிம் ஜனை:॥ 14

# ராத்ரி ஸூக்தம்

ராத்ரீம் ப்ரபத்யே ஜனனீம் ஸர்வ பூத நிவேசினீம் |
பத்ராம் பகவதீம் க்ருஷ்ணும் விஸ்வாஸ்ய ஜகதோ நிசாம் ॥

உலக வியாபாரம் எல்லாம் மறைந்து இருக்கும் காலம் இரவு. இது ஜீவராத்ரி எனப்படும். சகல பிரபஞ்சமும் லயமடைந்து பரம்பொருள் மட்டும் எஞ்சியுள்ள காலம். ஈஸ்வர ராத்ரி இந்த ராத்ரி ஸூக்தத்தில் துதிக்கப்படுகிறது. இது இரண்டு விதம். ஒன்று ரிக் வேதத்தில் ''ராத்ரீ வியக்யத்'' என்று தொடங்கும் முதல் எட்டு ரிக்குகளும், மற்றொன்று சாம வேதத்தில் ''ராத்ரீம் ப்ரபத்யே'' என்ற ருக்கும் ராத்ரி ஸூக்தமே.

காலராத்ரி என்பது கல்பத்தின் முடிவு. மஹாராத்ரி, பிரும்மாதிகளின் முடிவான ராத்ரி. மோஹ ராத்ரி அக்ஞானத்தை விளைவிக்கும்படியான மோகம். பாஸ்கரராயர் தம் உரையில் இம் மூன்று ராத்ரிகளுக்கும் விசேஷார்த்தங்களைச் சொல்கிறார். ப்ரளயம், பிரும்ம பிரளயம், மஹா பிரளயம் என்னும் மூன்று விதமான சக்திகளைத் தெய்வமாகக் கொண்டு ராத்ரி ஸூக்தத்தால் கொண்டாடப்படும் ராத்ரி தேவதை என்றும் குறிப்பிடுகிறார்.

தேவி மகாத்மியத்தில் முதல் அத்யாயத்தில், ''விஸ்வேஸ்வரீம் ஜகத்தாத்ரீம்'' முதல் ''ஹிந்து மேதௌ மகாஸுரௌ'' என்பது வரை படிப்பது பௌராணிக ராத்ரி ஸூக்தம். இந்த ராத்ரி ஸூக்தம் தாந்த்ரிக ராத்ரி ஸூக்தம் எனப்படும். இது பிரும்ம தேவனுல் கூறப்பட்ட ஸ்துதி.

சப்த சதியை படிப்பதற்கு முன் ராத்ரி ஸூக்தமும், சப்த சதிக்குப் பின் தேவி ஸூக்தமும் ஜபிக்கவேண்டும் என்பது மரபு. இவ்வாறு இரண்டு வைதீக ஸூக்தங்களின் நடுவே தந்திர சாஸ்திரங்களில் சிகரமான இந்த தேவி மகாத்மியம் படிக்கப்பட வேண்டும் என்ற விதி இருப்பதிலிருந்தே தந்திர நூல்கள் வேத வழிக்கு எவ்வளவு மதிப்பு கொடுத்துள்ளன என்பது தெரிய வரும்.

இந்த ஸூக்தத்தை கண்டவர் குசிக ரிஷி. ராத்ரியே தேவதை. இருள் என்று ஒன்று இருந்தால்தான் ஒளிக்கும்

மகிமை. இருளே அனைத்தின் மூலம். இந்த ராத்ரியே சிருஷ்டியனைத்தையும் ஒளியகத்தையும் உணர்வனைத்தையும் தன் கர்ப்பத்தில் வைத்து போஷித்து தக்க சமயத்தில் தோற்றுவிக்கும் அன்னை.

உலகிலுள்ள ஜீவராசிகள் எல்லாம் இரவு வந்ததும் ஆய்ந்து ஓய்ந்து அடங்கி கிடக்கின்றன என்றாலும் அவைகளின் மூச்சு நியதிக் கணக்கில் போய் வந்துக்கொண்டிருக்கிறது. அம்பிகை உலகின் மீது இரவு என்ற போர்வையைப் போர்த்துவிட்டு தான் மட்டும் மறையாமல் இந்த நியதியை நடத்திக் கொண்டிருக்கிறாள். ஆனால் ஒருபோதும் மறையாத அவளை யாரும் கண்டுகொள்வதில்லை.

இந்த ராத்ரி தேவதையுடன் விடியற்கால தேவதையாகிய உஷாவும் போற்றப்படுகிறாள்.

## ஸூக்தம்

*அஸ்ய ஸ்ரீ ராத்ரீ ஸூக்தஸ்ய குசிக ரிஷி : காயத்ரீ சந்த :*
*ராத்ரிர் தேவதா ஸ்ரீ ஜகதம்ப ப்ரீத்யர்த்தே ஜபே விநியோக :॥*

*ஓம் ராத்ரி வ்யக்ய தாயதீ புருத்ரா தேவ்ய க்ஷுபி :*
*வித்வா அதிச்ரியோதித ॥* 1

*(ராத்ரி தேவி எழுந்தருளுகிறாள். உலகில் எல்லாவற்றையும் கடாக்ஷிக்கிறாள்.)*

ஓர் வப்ரா அமர்த்யா நிவதோ
தேவ்யுத்வத ஜ்யோதிஷ பாததே நம : । 2

*(அழிவற்ற அத்தேவி மெதுவாக மேலும் கீழும் இருட்டைப் பரப்புகிறாள்.)*

நிருஸ்வ ஸார மஸ்க்ரு தோஷஸம்
தேவ்யாயதீ அபேது ஹாஸதே நம : ॥ 3

*(ராத்ரி தேவி தன் சகோதரி உஷையை தன் ஆதிக்கம் செலுத்தியபின் வரச் செய்கிறாள். அதனால் இருள் தானே மறைகிறது.)*

ஸா நோ அத்ய யஸ்யா வயம் நிதே
யாமந்த விக்ஷ்மஹி வ்ருக்ஷேன வஸதிம் வய : । 4

*(ராத்ரி தேவி பிரசன்னமானால்தான் நாம் இன்புற்று வாழ முடியும். இந்த இரவில்தான் தளர்ந்த உடல் ஓய்வு பெற்று மறுநாள் உழைப்பிற்கான பலத்தை அடைகிறது.)*

நி க்ராமாஸோ அவிக்ஷதா நி பத்வந்தே நி பக்ஷிண :
நி ச்யேனுஸச் சிதர்த்தின : ‖ 5

(மனிதன் முதல் எல்லா ஜீவராசிகளும் அவள் ஆதிக்கத்தில் ஒடுங்குகின்றன.)

யாவயா விருக்யம் வ்ருகம் யவஸ் தேன
மூர்ம்யே அதாந : ஸுதராபவ ‖ 6

(ராத்ரி ரூபியான சித் சக்தியே துர்வாசனை வடிவான பெண் ஓநாயையும் பாவம் செயல் வடிவான ஆண் ஓநாயையும் எங்களை அணுகாமல் விரட்டிவிடு. சித்த விருத்தியை அபகரிக்கும் காம மாகிய திருடனையும் விரட்டிவிடு. இரவு நேரங்களில் பாப காரியங்கள்; காம விருத்திகள் அதிகம் தலைகாட்டும். அதிலிருந்து காப்பாற்றும்படி ராத்ரி தேவி பிரார்த்திக்கப்படுகிருள்.)

உபமா பேபி சத்தம : க்ருஷ்ணம் வ்யக்த
மஸ்தித உஷ ருணேவ யாதய ‖ 7

(அஞ்ஞானமாகிய காரிருள் என்னை அணுகாமல் செய்துவிடு. செல்வத்தை அளித்து கடன் உபாதைகளிலிருந்து நீக்க வழி செய்வது போல ஞானத்தை அளித்து அஞ்ஞான பந்தங்களி லிருந்து மீட்பாய்.)

உபதே கா இவாகரம் வ்ருணீஷ்வ
துஹிதர் திவ : ராத்ரிஸ்தோமம் ந ஜிக்யுஷே ‖ 8

(சூரிய புத்ரியே (உஷை), நீ பால் கொடுக்கும் பசுவைப் போலாவாய். நான் உன்னை வரவேற்கிறேன். ராத்ரி தேவியே, நீ சுகமாகப் போய் மறுபடியும் வா.)

அக்ஞாள இருள் நீங்கவேண்டும் என்பதே இந்த ராத்ரி ஸூக்தத்திலுள்ள முக்கிய பிரார்த்தனை. இந்த ராத்ரி ஸூக்கத் திற்கு சாயனுசாரியாரும், நீலகண்ட ஸ்வாமியும் பாஷ்யம் எழுதி யுள்ளனர். இதற்கு 'வன துர்க்கா ஸூக்தம்' என்று பெயர்.

வேத ரிக்குகளில் இரவையும், வைகறையையும் சகோதரி களாக வர்ணித்துள்ளனர். உஷா தேவி பற்றிய ரிக்குகளில் ராத்ரி தேவியைப் பற்றியும், ராத்ரீ தேவி பற்றிய ரிக்குகளில் உஷா தேவி பற்றியும் ரிஷிகள் கூறுவது சகஜம். இருவரும் சகோதரிகள்.

உருவம் வெவ்வேருயினும் இருவருக்கும் மனம் ஒன்றே.

உஷா தேவி அறிவுக் கதிர்களை பரப்பும் வெண்மைப் பசு. ராத்ரி கரு நிறமான பசு. இருவரும் ஞானப்பாலைத் தரக்கூடிய வர்கள்.

இரவும் பகலும், காலம் என்ற நாணயத்தின் இரு புறங்கள் சண்டியும், லலிதையும் அந்த ஆதி சக்தியின் இரு தோற்றங்கள்.

# நவாக்ஷரீ

"ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே"

இதை சண்டி காயத்ரீ என்பர். இது ஒன்பது அக்ஷரங்களாலானது. வாக் பீஜம், மாயா பீஜம், காம பீஜம் என்ற மூன்றும் முறையே மகா சரஸ்வதி, மகா லக்ஷ்மி, மகாகாளி தேவதைகளைக் குறிக்கும்.

ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ஒவ்வோர் நிறமுண்டு. உயிர் மெய் எல்லாவற்றையும் கணக்கிட்டால் இந்த நவாக்ஷரீயில் 24 அக்ஷரங்கள் இருப்பது தெரிய வரும். இதனுல்தான் இதை 'சண்டி காயத்ரீ' என்பர். காயத்ரீயின் பொருளே இம் மந்திரத்தின் பொருளாகும்.

பராசக்தியின் மூன்று வடிவமே சத், சித், ஆனந்தம் (சச்சிதானந்தம்).

உள்ளது எல்லாம் இல்லை என்ற பின்பும் நிற்கும் ஒரே ஆதாரம் சத்யம். இந்த சத்யம் அவளே. ஆகவே "சத்."

இந்த சத்யம் தன்னைத் தானே அறிகிறது. அப்படி அறிந்துக் கொள்வது "சித்."

இந்த அறிவினுல்தான் சகல உயிரினங்களின் சிற்றறிவுகளும் பிறந்தன. இந்த அறிவுகள் அழிந்தாலும், மாறினுலும் அந்த "சித்" அப்படியே இருக்கும்.

அம்பிகை எல்லாம் அழிந்து போகும் பிரளயத்திலும் 'சத்' தாக இருந்து அதோடு சத்தாக இருப்பதைப் பூரணமாக அறிந்து 'சித்' தாக, ஞானமாக, சைதன்ய தேஜோ முகமாக இருக்கிறுள்.

அப்படித் தன்னைத்தானே உணரும்போது ஏற்படுவதே ஆனந்தம். ஜீவராசிகளின் அறிவுக்கு அவள் 'சித்' ஆதாரம். உணர்வுக்கு அவள் ஆனந்தமே ஆதாரம்.

இந்த 'சத்' தின் பீஜம் 'ஐம்'. 'சித்' தின் பீஜம் 'ஹ்ரீம்'. ஆனந்த பீஜம் 'க்லீம்.'

இம்மூன்றும் பராசக்தியின் அக உணர்வு. இவற்றை அம்பிகை பக்தர்களுக்கு உணர்த்துவதே "சாமுண்டா" என்பர். சாமுண்டா என்பது அசத்ய அக்ஞான துன்பங்களை மாய்ப்பதற்கேற்ற திருநாமம்.

"ஓம், ஐம், ஹ்ரீம், க்லீம் சாமுண்டாய விச்சே"

இதுவே நவாக்ஷரீ மந்த்ரம்.

சாதகன் தன்னைக் கற்பூரம் போல அம்பிகையினிடம் கரைத்துக் கொள்வதை ''விச்சே'' குறிப்பிடுகிறது.

ஆனந்த ரூபியான மகா காளி முதலிலுள்ள வாக்பவ (ஐம்) பீஜத்தினுலும், சத் ரூபியான மகா லக்ஷ்மி இடையிலுள்ள மாயா (ஹ்ரீம்) பீஜத்தினுலும், சித் ரூபியான மகா சரஸ்வதி கடைசியிலுள்ள காமராஜ (க்லீம்) பீஜத்தினுலும் அழைக்கப்படுகின்றனர். மோக்ஷத்திற்கு சாதனமான, நிர்விகல்பமான ஞானத்தைக் குறிப்பது சாமுண்டா.

இந்த நவாக்ஷரீ மந்திரத்திற்கு மகா காளி, மகா லக்ஷ்மி, மகா சரஸ்வதி தேவதைகள். ''உங்களை ஞானத்தினுல் அடையும் பொருட்டு என் இருதயத்தில் தியானிக்கிறேன்'' என்று பொருள்.

சப்த சதியின் முக்கிய மந்திரம் நவாக்ஷரீ. நவாக்ஷரீ தேவியின் உருவமே. ''தர்மம் அழிந்து அதர்மம் தலை தூக்கும் போது நான் அவதரித்து தர்மத்தை நிலை நாட்டுவேன்'' என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் கூறியது போல அம்பிகையும் தேவி பாகவதத்தில் கூறுகிருள். ஆகவே அம்பிகையும் விஷ்ணுவும் ஒருவரே.

பரமேஸ்வரனின் சக்தி ஒன்றே என்றுலும் போக காலத்தில் பவானி என்றும், கோபக் காலத்தில் காளி என்றும், போர் சமயத்தில் துர்க்கை என்றும், லோக சம்ரக்ஷணத்தின் போது விஷ்ணு மாயை என்றும் கூறப்படுகிறது.

''ஹ்ரீம்'' என்பது சக்திப் பிரணவம். இதற்கு புவனேஸ்வரி பீஜம் என்று பெயர். இதில் ஆகாச பீஜம், அக்னி பீஜம், ஞான பீஜம், பிந்து பீஜம், நாத பீஜம் என்ற ஐந்து உண்டாகின்றன.

ஆகாயம் போல் அம்பிகை எங்கும் வியாபித்திருக்கிருள் என்பதை ஆகாச பீஜமும், சித் ஸ்வரூபிணி வேறு, பிரபஞ்சம் வேறு என்று மாயையாகக் காட்டுவதை அக்னி பீஜமும், ஞான ஸ்வரூபிணி என்பதை ஞான பீஜமும், உலகத்தை தோற்றுவித்து ஒடுக்குவதை பிந்துவும், சப்த ரூபமாக வேதங்களில் உணர்த்தப் படுவதை நாதமும் உணர்த்தும்.

வித்திலிருந்து (பீஜம்) மரம், வேர், கிளை, மலர், பழம் முதலியன உண்டாகின்றன. அது போலவே மாயா பீஜ வாச்யமான பிந்துவிலிருந்து இச்சா, ஞான, கிரியா ரூபிணியான ரௌத்ரீ, வாமா, ஜ்யேஷ்டா சக்திகளும், மகா காளி, மகா லக்ஷ்மி மகா சரஸ்வதி முதலிய சக்திகளும் தோன்றுகின்றனர்.

பக்தர்களைக் காப்பதற்கும், துஷ்டர்களை அழிப்பதற்கும் பல கோலங்கள் அம்பிகை எடுக்க நேர்ந்தது. ஒவ்வொரு ஸ்வரூபத்தையும் வழிபட்டு அருள் பெற தனித் தனி மந்திரங்கள் உண்டு.

## நவாக்ஷரீ ஜபம்

அஸ்ய ஸ்ரீ நவாக்ஷரீ மகா மந்திரஸ்ய மார்க்கண்டேய ரிஷி : ஜகதீஸ் சந்த : துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதி தேவதா ;
ஹ்ராம் பீஜம் (நாபி) ஹ்ரீம் சக்தி ; (குஹ்யம்), ஹ்ரூம் கீலகம் (பாதம்)

துர்க்கா லக்ஷ்மி சரஸ்வதி ப்ரசாத
ஸித்தியர்த்தே ஜபே விநியோக ; (சர்வாங்கம்)

ஹ்ராம் அங்குடாப்யாம் நம ;—ஹிருதயாய நம
ஹ்ரீம் தர்ஜனீப்யாம் நம :—சிரஸே ஸ்வாஹா
ஹ்ரூம் மத்யமாப்யாம் நம :—சிகாயை வஷட்
ஹ்ரைம் அநாமிகாப்யாம் நம :—கவசாயஹூம்
ஹ்ரௌம் கனிஷ்டிகாப்யம் நம ;—நேத்ரத்ரயாய வௌஷட்

ஹ்ர : கரதலகர பிரதிஷ்டாப்யாம் நம :— அஸ்த்ராயபட் பூர் புவஸூவரோம் இதி திக்பந்த :

தியானம்

மாதர்மே மதுகைடபக்னி மஹிஷ ப்ராணுபஹா
ரோத்யமே ஹேலா நிர் மித
தூம்ரலோசன வதே ஹே! சாமுண்டார்த்தினி ।

நி : சேஷீ க்ருத ரக்த பீஜ தனுஜே
நித்யே நிசும்பாபஹே சம்பத்வம்ஸினி
ஸம்ஹராசு துரிதம் துர்க்கே நமஸ்தேம்பிகே.

(தாயே! மதுகைடபர்களை ஒழித்தவளே! மஹிஷாசுரனுடைய பிராணனைப் போக்கியவளே! விளையாட்டாக தூம்ரலோசனனை வதைத்தவளே ! சண்ட முண்டர்களை அழித்தவளே, ரக்த பீஜாசுரனை நிர்மூலமாக்கியவளே; சும்பனையும் நிசும்பனையும் ஒழித்தவளே! நித்யமானவளே; துர்க்காம்பிகையே! உன்னை நமஸ்கரிக்கிறேன். அருள் செய்வாய்.)

| | | |
|---|---|---|
| லம்—பிருத்வியாத் மிகாயை | கந்தம் | சமர்ப்பயாமி |
| ஹம்—ஆகாசாத் மிகாயை | புஷ்பம் | ,, |
| யம்—வாயவாத் மிகாயை | தூபம் ஆக்ராபயாமி | ,, |
| ரம்—அக்னியாத் மிகாயை | தீபம் தர்சயாமி | ,, |
| வம்—அம்ருதாத் மிகாயை | அம்ருதம் மகாநைவேத்யம் | ,, |
| ஸம்—ஸர்வாத் மிகாயை | ஸர்வோபசாராம் | ,, |

(லம்—பிருத்வீ பீஜம்
ஹம்—ஆகாச ,,
யம்—வாயு ,,
ரம்—அக்னி ,,
வம்—அமிர்த ,,
ஸம்—ஸர்வாத்ம ,,)

மூலம் : ஓம், ஐம், ஹ்ரீம், க்லீம், சாமுண்டாயை விச்சே.
மூலமந்திரத்தின் அர்த்தம்

சித்ஸ்வரூபிணியான மகா சரஸ்வதி
சிதாத்ம ஸ்வரூபிணியான மகாலக்ஷ்மி
ஆனந்த ரூபிணியான மகாகாளி.

இம்மூவரும் ஒருங்கிணைந்த தேவியாகிய உன்னை, எல்லாத் தீமைகளையும் போக்கும் நிர்விகல்ப ரூபிணியான உன்னை இருதய கமலத்தில் தியானிக்கிறேன்.

பூர் புவஸுவரோமிதி திக்விமோக : த்யானம் லம் இத்யாதி பஞ்ச பூஜா.

ஸமர்ப்பணம் : குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீத்வம் கிருஹா ணாஸ்மத் க்ருதம் ஜபம் | ஸித்திர்பவது மே தேவி த்வத் ப்ரஸாதான் மயிஸ்திரா ||

---

## திதிகளும் அவளே

### பிரும்மா ஸ்துதி

நீ ஒருவளே உலகில் இருப்பவள்
தரை என்ற குணத்துடன் சேர்ந்து இரு ரூபமானாய்

மூன்று வேதமாகி மூன்று குணங்களுக்கு இருப்பிடமானாய்
நான்காவது மூர்த்தியாகி (துரீய)

நான்கு அவஸ்தைகளை நீக்குகிறாய்

பஞ்சமியாக இருந்து பஞ்ச பூதங்களுக்குத் தலைவியாகிறாய்

ஷஷ்டியாக இருந்து ஷஷ்டேச்வரி என்றும்
ஸப்தமியாக இருந்து ஸப்தவரேஸ்வரி என்றும்

அஷ்டமியாக அஷ்டவஸுநாதை என்றும்
நவமியாக நவக்ரேஸ்வரி என்றும்

தசமியாக தச திக் பூஜ்யா என்றும்

ஏகாதசி—ஏகாதச ருத்ரர்களால் பூஜிக்கப்பட்டவளாய்
துவாதசி —124 ஜபமுள்ளவள் என்றும்
த்ரயோதசி— 13 கணங்களுக்குப் பிரியமானவள் என்றும்
சதுர்த்தசி — 14 மநுக்களை உண்டு பண்ணியவள் என்றும்
பஞ்சதசி — 15 திதியாக இருப்பவள் என்றும்
ஷோடசீ — 16 சந்திரகலை உள்ளவள் என்றும்

தேவியை பிரும்மா பிரார்த்தித்தார்.

---

# சப்த சதி மூன்று சரிதங்கள் 3

உத்யத் பாஸ்வத் ஸமாபாம் வித்ருத நவ
ஜபாமிந்து கண்டாவ பத்தாம்
ஜ்யோதிர் மௌளிம் த்ரிநேத்ராம்
மணிலஸத் குண்டலாம் விவித பத்ம காஞ்சிம் |
ஹாரத்ரைவேய பூஷாம் மணிகுண வஸா
யாத்யைர் விசித்ராம் பராட்யாம்
அம்பாம் பாசாங்கு சாட்யாம் அபய
வரகராம் சாமுண்டாம் நமாமி ||.

தர்மமே எல்லாவற்றையும்விட மேலானது. அதனுல் தான் அது நான்கு புருஷார்த்தங்களில் முதல் இடம் பெற்றிருக்கிறது. அத் தர்மத்தைக்கொண்டே மற்ற மூன்ருன அர்த்தம், காமம். மோக்ஷத்தைப் பெறவேண்டும்.

அதர்மம் அழிந்து விட்டால் ஆனந்தம் ஏற்படுவது நிச்சயம் இந்த அதர்ம ஒழிப்பு சக்தியே சண்டி என்ற சாமுண்டி, தீய சக்திகள் பெரும்படையாக (சமூ) நம்மைத்தாக்க அவைகளைத் தகர்ப்பவள் சாமுண்டி. மகாகாளி மகாலக்ஷ்மி மகாசரஸ்வதி இம்மூவரும சேர்ந்த சமஷ்டி ரூபமே சாமுண்டி.

நவாக்ஷரி மந்திரத்தில் இவள் ஒருவள் பெயர் மட்டுமே இடம் பெற்றிருக்கிறது. மகாகாளி, மகாலக்ஷ்மி, மகாசரஸ்வதி இவர் களின் பீஜ அக்ஷரங்கள் மட்டுமே இதில் இடம் பெற்றிருக் கின்றன.

| | | | |
|---|---|---|---|
| சத் | என்பது மகாலக்ஷ்மி | பீஜம் | ஸ்ரீம் |
| சித் | என்பது மகாசரஸ்வதி | பீஜம் | ஐம் |
| ஆனந்தம் | என்பது மகாகாளி | பீஜம் | க்லீம் |

இந்த சத்சித் ஆனந்தம் கைகூட அத்யாவசிய அடிப்படை அதர்மம் அழிவது. ஈஸ்வரி என்ற பெயரை காளி லக்ஷ்மி. சரஸ்வதி; பெயருடன் சேர்த்து சொல்வதில்லை துர்க்கையை துர்க்காம்பா என்று சொல்லுகிருேமே தவிர ஈஸ்வரி என்று சேர்த்துச் சொல்வதில்லை. சாமுண்டிக்கு மட்டுமே ஈஸ்வரி சேர்க் கப்படுகிறது.

மூலாதார சகஸ்ரார கிரந்திகளை பேதிக்கக்கூடிய யோக சக்தியே சாமுண்டி என்பது தத்துவ விளக்கம்.

லலிதா சகஸ்ரநாமத்தில் அம்பிகைக்கு ''பஹுரூபா'' என்று ஒரு பெயர். அநேக விதமான ரூபங்களோடு இருப்பவள் என்று அர்த்தம்.

சர்வ பிரபஞ்சங்களின் ஜனனீயாக இருப்பதால் பிரபஞ் சங்கள் எல்லாம் அம்பிகையின் ரூபம் என்பதை

பஹுநியஸ்யா ரூபாணி ஸ்திராணி ச சராணி ச
தேவ மானுஷ திர்யஞ்சி பஹுரூபா தத: சிவா!

என்கிறது தேவீபுராணம்.

பரஸ்வரூபத்தில் அம்பிகை அரூபமாக இருந்தாலும் கிரியாத் மிகையாக செயல்படும்போது அநேகவித ரூபங்களை மேற்கொள் கிறுள். அம்பிகை ஒருவளாக இருந்தாலும் அசுரர்களை ஒழிப்பதில் பல்வேறு ரூபங்கள் எடுக்கிறுள் என்பதை.

''அசுர ஹநநார்த்தம் ஏகைவாநேகா'' என்கிறது கௌடபாத ஸூத்திரம். ஏகமாக இருக்கும் அம்பிகை பலவித வேஷங்களைத் தரித்து பலவிதமான ரூபங்களுடன் லிளங்குகிறுள்.

இதை தேவி பாகவதம் ''லக்ஷ்மி நீ வா காதி ரூபேணார்த்த கீவ விபாதியா'' என்கிறது.

## 13 அத்யாயங்களின் சுருக்கம்

நாடிழந்த அரசனும், குடும்பத்தினரால் விரட்டப்பட்ட வைசியனும் அமைதி இழந்து காட்டுக்கு வந்து மேதஸ் முனிவரை சந்தித்து தேவி மகிமையை அறிகின்றனர். தேவியை வழிபட்ட தால் சுரதன் மீண்டும் ராஜ்யம் பெற்று மறு ஜன்மத்தில் ஸாவர் ணிக மநுவாகப் பிறந்து உலகையே ஆண்டான்; அம்பிகையை வழிபட்ட வைசியன் சமாதி ஞானவான் ஆனுன்.

முதல் அத்யாயத்தில் லோக மாயை பற்றியும் அதில் சிக்குண்டு தேவர்கள் முதல் எல்லோருமே தவிப்பது பற்றியும் மாயையான அந்த லோக மாதாவை வழிபட்டே அதிலிருந்து மீள வேண்டும் என்றும் உணர்த்தப்படுகிறது. லோகத்தை சம்ரக்ஷிக் கும் விஷ்ணுவே அந்த யோக மாயைக்கு உட்படுகிறுர். அந்த யோகமாயையே மகாகாளி. இம் முதல் அத்யாயம் பிரதம சரிதம். 104 மந்திரங்கள். பிரும்மா லோகமாயையை துதிக்கும் ஸ்தோத்திரம் இதில் மிக முக்கியம். மதுகைடப ஸம்ஹாரம். இதில் நடைபெறுகிறது.

2, 3, 4 அத்யாயங்கள் மத்யம சரிதம். மஹிஷாசுரனுல் துன்புறுத்தப்படும் தேவர்கள் அம்பிகையை ஸ்தோத்தரிக்கின்ற னர். சகல தேவர்களின் உடலினின்று சக்திகள் வெளிப்பட்டு அம்பிகை உருவாகிறுள். இவளே அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி.

2-ம் அத்யாயத்தில் மகிஷாசுர சைன்ய வதம் நடைபெறுகிறது. 69 மந்திரங்கள்.

மூன்றுவது அத்யாயத்தில் மகிஷாசுர சம்ஹாரம் நடைபெறுகிறது. 44 மந்திரங்கள். அத்யாயம் 4-ல் தேவர்கள் தேவியை ஸ்துதி செய்கின்றனர். 42 மந்திரங்கள்.

அத்யாயம் 5 முதல் 13 வரை உத்தம சரிதம். 5-வது தேவி தூத சம்வாதம், மொந்தம் 129 மந்திரங்கள். 6-வது அத்யாயம் தூம்ரலோசன வதம். 24 மந்திரம், ஏழாவது அத்யாயம் சண்ட முண்டவதம். 27 மந்திரங்கள். 8-வது அத்யாயம் ரக்த பீஜவதம் 63-மந்திரங்கள். 9-ம் அத்யாயம் நிசும்பவதம். 41 மந்திரங்கள். 10-ம் அத்யாயம் சும்பவதம். 32 மந்திரங்கள். 11-ம் அத்யாயம் நாராயணீ ஸ்துதி. 55 சுலோகங்கள். 12-வது அத்யாயம் பகவதி வாக்கியம். அம்பிகையே சப்த சதி பாராயணப் பலனைப்பற்றிக் கூறுகிறுள். 41 மந்திரங்கள். அரசன், வைசியனுக்கு வரம் அளிக்கப் படுவது 13-வது அத்யாயம். 29-சுலோகங்கள்.

## தேவி பாடம்

சப்த சதி முழுவதும் புரியும் தமிழில் பாடல் ரூபமாக வெகு காலமாக இருந்து வருகிறது. சென்ற நூற்றுண்டில் பிரபலமாக இருந்த ''விவேக சிந்தாமணி'' பத்திரிகையில் இது வெளிவந்தது.

இதை படிப்பதே சப்தசதி பாராயணத்திற்கு சமம்.

சுரதன் என்று ஓரரசன் தன் ஜகத்தை
எல்லாம் ஆண்டிருந்தான்
தர்மா தர்மத்தை ஆராய்ந்து நல்ல
சாஸ்திரப்படிக்கு ஆண்டுவந்தான்

அஸூயையினுல் ஒரு பகை யரசன் அவனை
அடித்து துரத்தி விட்டான்
அதிசோகத்துடன் ராஜாவும் ஒருஅடவி
தனில் வந்து சஞ்சரித்தான்.

சமாதி என்னெரு வைசியனெருவன்
தன் புத்திரருடன் விரோதப்பட்டு
பொருக்க மாட்டாது கோமுட்டியும்
புறப்பட்டு லந்தான் வனத்தை நோக்கி.

கோமுட்டியைக் கண்டு ராஜனுமப்போ
குசலப் பிரசினம் கேட்டிடவே
அன்புடையாளும் என் புத்திராளும்
மகா அவமானந்தன்னை செய்தார்கள்.

சகிக்க மாட்டாதே நானும் இப்போதிந்த
தவவனத்திற்கு வந்தேன் என்முன்
அவன் சொல்லி வந்த வார்த்தையைக் கேட்டு
ஆச்சரியப்பட்டு ராஜனப்போ

என்னுடைய வர்த்த மானந் தன்னை
எடுத்துரைப்பேன் நீர் கேளும்
சத்துருவாக ஒரு ராஜன்வந்து என்னை
சண்டை பண்ணி ஜெயித்து விட்டான்.

பாரியையுடனே புத்திரானேயுமென்
பட்டணம் தன்னையும் நான் இழந்தேன்
பந்து ஜனங்கள் தனை இழந்து இந்த
வேடர் வனத்தில் வந்தேன் என்று

சொல்லிக்கொண்டு இருவருமாய்
சுமேதஸ் முனியைக்கண்டு பணிந்தார்
திடபுத்தியாய் இருக்கும் போது இந்த
சோகம் வந்து மறைப்பானேன்?

ஞானஸ்வரூபியே சொல்லும் என்று கேட்க
ராஜாவைப் பார்த்து முனியும் சொல்வார்
பள்ளுப்பறை பதினறு ஜாதிகட்கும்
ஈ எறும்பு எண்பத்திநான்கினுக்கும்

எனது நான் என்ற அபிமானம் ஜீவர்
எல்லாரிடமும் இருக்கின்றது
அகங்காரம் பூரணமாயிருக்கும்போது
அகம்பிரும்மம் நான் என்கிறீரே

அஞ்ஞான மாயா மயக்கம் விலக்கிட
ஹரிப்பிரம்மாவாலும் கூடாது
அண்டம் பதினலுலகம் முழுவதும்
அம்மன் மாய்கையினலே விளங்கும்

ஸ்ரீதேவி ஜகன்மாதாவினுடைய
திருஷ்டியினலே விளங்கி நிற்கும்
ஸ்ரீதேவி மாய வல்லபமென்றந்தச்
சுமேதஸ் முனியும் உரைத்திடவே

தேவி யாரோ தெரியவில்லை என்று
திரும்பவும் ராஜன் கேட்கலுமே
ஸ்ரீதேவி மகிமைதன்னையப்போ
சுமேதஸ் முனியும் உரைக்கலுற்முர்.

## மதுகைடபர் வதம்

திருப்பாற்கடல் தன்னில் ஸ்ரீஹரியும்
சேஷ சயனந்தன்னில் பள்ளி கொண்டார்
மகாவிஷ்ணுவின் கர்ணங்களிலிருந்து
மதுகைடபர் இருவர் உண்டானார்.

விழித்துப் பார்த்தங்கே பிரும்மாவை அவர்கள்
முஷ்டியுத்தம் பண்ண வந்தெதிர்த்தார்
அயனும் கண்டு பயந்துக் கொண்டு
ஸ்ரீ ஹரியை வந்து நமஸ்கரித்தார்.

நினைவு தெரியாத விஷ்ணுவும் அப்போ
நித்திரையின் வசப்பட்டிருந்தார்.

* * *

மோகினியே ஜகன்மாதவே மகா
விஷ்ணுவை விட்டு வெளியேறம்மா
என்றுலோக மோகினி மகிமைதனைச் சொல்லி
நான்முகரும் ஸ்தோத்தரிக்க

பகவானுடைய சரீரத்தை விட்டு தேவி
பிரத்யக்ஷமாக எதிரில் வந்து
வேண்டும் வரத்தைக் கொடுத்து பிரும்மாவுக்கு
விச்வமோகினியும் மறைந்தாள்.

மகாவிஷ்ணுவும் எதிர் நின்ற பிரும்மாவை
வந்த காரியம் கேட்கலுற்றார்
மஹாவிஷ்ணுவுடன் யுத்தம் பண்ணப்
பொல்லா மதுகைடபர் வந்தெதித்தார்

ஹரியுடனே அசுரர்களிருவரும்
அநேககாலம் யுத்தம் செய்தும்
ஹரியும் ஜெயிக்க முடியாமல் அந்த
அசுரர்களைப்பார்த்து சந்தோஷமாய்

அசுரர்களே உங்களுக்கு எம்மால்
ஆனவரத்தை தருவோம் என்றார்
விஷ்ணுவைப் பார்த்தவர்கள் கர்வத்துடன்
உமக்கு வேண்டும்வரம் தருவோம் என்றார்.

உங்கள் இருவரையும் சம்ஹரித்திட
ஒரு வரம் எனக்கு வேண்டும் என்றார்.
வஞ்சித்தார் நம்மை வார்த்தை
இரண்டு சொல்லலாகாதென்று

அப்பு இல்லாத ஸ்தலந்தனில் எங்களை
ப்ருதிவியில் வைத்துக் கொல்லும் என்றார்
தன்னுடையத் துடையில் வைத்து
ஸம்ஹரித் தாரப்போ அசுரர்களை

அசுராளுடைய தேகங்கள் தானிப்போ
அவனியாக விளங்குவது
ராஜேஸ்வரி மகிமைகள் சொல்ல
நான்முகராலும் முடியாது.

## மகிஷ வதம்

மகிஷ அசுரன் என்னும் ஒருவன்
தபசு மிகப்பண்ணி வரமடைந்தான்

ஜகத்தினுள்ளோரை உபத்திரவிக்க
தேவர்கள் ரிஷிகள் ஒன்றுகூடி
தேவி மகிமையைச் சொல்லி
ஸ்தோத்தரித்தனர் எல்லோரும்.

தேவர்களுடைய முகத்திலிருந்து அம்மன்
தேஜோரூபமாக ஒன்று சேர்ந்து
அத்தனை பேர்களின் தேஜஸை க்ரஹித்து
அம்பிகை பிரத்யக்ஷமாக வந்தாள்.

அத்தனை தேவர்களும் பணிந்து தங்கள்
ஆயுதமும் தேவி கைகொடுத்தார்
பக்தியாய் ஆயுதமும் கொடுக்க அம்மன்
பதினெட்டு கையிலும் தரித்துக்கொண்டு.

சிம்ஹவாகனத்தில் ஏறிக்கொண்டாள் மஹா
தேவியும் யுத்தம் பண்ண வந்தாள்
மகிஷாசுரனும் தேவியுமாய் மஹா
ஆங்காரமாக யுத்தம் பண்ணலுற்றார்

அநேக காலம் மகிஷன் தேவியுடன்
அஞ்சாமலே யுத்தம் செய்கின்றான்
மாய்கையினாலே பலரூபம் எடுத்தவன்
மாதேவியுடன் யுத்தம் செய்தான்

காளி ரூபம் எடுத்துக்கொண்டு தேவி
கைதனில் சக்ராயுதமும் கொண்டு
மகிஷரூபம் எடுக்கும் போதவனை
மடிய வெட்டினாள் மாதேவியும்

காமாக்ஷி தேவியும் சந்தோஷமாய் அந்த
காளி தேவியைக்கண்டுகந்து
மகிஷாஸுர மர்த்தனி என்றப்போ
மகா தேவியும் தானழைத்தாள்.

மகிஷாஸுரனே சம்ஹரித்த எங்கள்
மகாதேவியே நமஸ்காரம்
மனத்தாபம் போக்கி நாடுதந்த
மகேஸ்வரியே நமஸ்காரம்

அண்டத்திற்கெல்லாம் அதிபதியே
ஜகதீஸ்வரியே நமஸ்காரம்
அபயமென்ருேரை ரக்ஷித்திடும்
அம்மா உனக்கு நமஸ்காரம்

பிரணவ மயமான பார்வதியே
பரதேவதையே நமஸ்காரம்
சுத்தஸ்வரூப சுந்தரியே சிவ
காமவல்லியே நமஸ்காரம்

ஞானஸ்வரூபியே கல்யாணியே
ஸ்ரீமந் நாராயணியே நமஸ்காரம்
சாந்தஸ்வரூப சரீரணியே சிவ
சங்கரியே நமஸ்காரம் என்று

தேவர் எல்லாம் துதிக்கலுமே மகா
தேவியும் கேட்டதி சந்தோஷமாய்
வேணும் வரங்களைக் கேளும் தரோம் என்று
வேதநாயகி சொல்லலுமே

ஆபத்துகள் ஒன்றும் வராமலே எங்களை
அம்மா நீ வந்து ரக்ஷிக்கவேண்டும்
ஆகட்டும் என்று விடையளித்து
ஜகதம்பிகையும் அந்தர்தானமானுள்.

## சும்ப நிசும்ப வதம்

சும்பன் நிசும்பன் என்றிரண்டு பொல்லா
சூரர்களப்போ உண்டானுர்கள்
பால்ய வயதில் தபசு பண்ணி அவர்கள்
**வரங்கள் வேணதெல்லாம் அடைந்தார்.**

இந்திரனுடனேயே தேவர்கள் பிரும்மனை
எல்லோரையும் அடித்துத் துரத்தி
சமஸ்த லோகம் நடுங்கிடச் செய்து
சங்கையில்லாமலே ஆண்டிருந்தார்.

ஏக்கமுற்ற அமரர்கள் எல்லாம்
ஏகமாக ஒன்று கூடி
நமஸ்தே நமஸ்தே என்று சொல்லி
ராஜேஸ்வரியை ஸ்தோத்தரித்தார்.

மூலாதாரி சரஸ்வதியே ஜகன்
மோகினியே நமஸ்காரம்
மாயாதாரி லக்ஷ்மியே
மகேஸ்வரியே நமஸ்காரம்

பகவான் தேகத்தில் பாதி என்றே
எங்கள் பார்வதியே நமஸ்காரம்
எங்களை ரக்ஷிக்கவேண்டு மிப்போ
ஜகதீஸ்வரியே நமஸ்காரம்.

தேவரெல்லோருமாய் ஸ்தோத்தரிக்க
தேவியும் பிரத்யக்ஷமாக வந்து
அஞ்சாதீர்கள் நீங்கள் என்று
அபயம் அளித்தாள் தேவருக்கு

ஹிமயப்பர்வதம் தன்னில்வந்து தேவி
கன்னிகா ரூபம் எடுத்துக்கொண்டு
சொர்ணமயமான ஊஞ்சலில் இருந்து
தானே பாடிக்கொண்டு ஆடலுற்றாள்

சண்டமுண்ட ரென்றசுரர்களும்
கானந்தன்னைக் கேட்டு ஓடிவந்து
தேவி அருகில் வந்து சேதியொன்று
எடுத்துரைப்பர்

சும்பன் நிசும்பன் என்றிரண்டு பேர்
மூன்று உலகமும் ஆண்டிருக்கா
எங்கள் ராஜாவுக்கு ஏர்வையம்மா
இந்த க்ஷணத்திலே வாருமம்மா

வாரும் என்றஅசுரன் அழைக்கலுமே
மகேஸ்வரியும் எடுத்துரைப்பாள்
ஸ்திரீ புத்திக்கு ஸ்திரமில்லையே நான்
தெரியாமலே ஒன்று செய்துவிட்டேன்

பிரதிக்ஞை ஒன்று செய்து விட்டேன்
என் பர்த்தாவாக வரவேண்டும் என்றால்

யுத்தம் பண்ணியே என்னை ஜயித்தவர்
எனக்கிஷ்டமாகிய பர்த்தா என்று
உங்கள் ரா ஜாவுக்குச் சொல்லுங்கள்
என்றம்மன் உத்தாரம் சொல்லி அனுப்பி வைத்தாள்

சும்பா சுரன் கேட்டுக் கோபத்துடன்
தூம்ரலோசனைக் கிட்டழைத்து
நய பயமாக அவளுக்குச் சொல்லி
நம்ம மகிமையை எடுத்துரைத்து

இச்சேதி ஒன்றையும் கேட்காவிட்டால்
இழுத்துக் கொண்டுவாரும் என்றான்.
அதட்டியே சில வார்த்தை சொல்லியே தூம்ரலோசனும்
இழுக்க வந்திட்டான் அம்மனையும்

பார்த்து அம்மனும் ஹூம்காரம்
செய்யவே பஸ்மமாக எரிந்து போனான்.
சண்டமுண்டர் ஓடி வந்து
சங்கரி தேவியை வந்தெதிர்த்தார்

கண்டு தேவி தன் கோபத்தீயாலே
காளி தேவியை உண்டாக்கினாள்.
சண்ட முண்டர் தலையைவெட்டி காளி
சங்கரி தேவி முன் வைத்து நின்றாள்

சங்கரியம்மனும் சந்தோஷமாக
சாமுண்டி என்ற பேர்தான் கொடுத்தாள்
சண்ட முண்டரும் பட்டாரென்று கேட்டு
சர்ப்பம் போல சும்பன் சீறிக்கொண்டு

அதிபலவானான ரத்த பீஜன் தன்னை
அம்பிகை முன்னால் அனுப்பி வைத்தான்
சகல தேவர்கள் அம்சங்களும் சேர்ந்து
சப்த மாதாக்கள் உண்டானார்கள்

நாராயணி நரஸிம்ஹி என்றும்
வைஷ்ணவி மஹாதேவி என்றும்
பிரஹ்மாணி கௌமாரி என்றும்
காளி சாமுண்டா என்றும்

ஈஸ்வரியுடைய தோழிகளாகவே
ஏழு பெண்களைக் கூட்டிக்கொண்டு
ரக்த பீஜனுடன் யுத்தம் பண்ணும்
போது ரத்தம் கீழே விழுந்ததப்போ

பிந்துவுக்கு பிந்து ரக்த பீஜனுக
பூமி எங்கும் முளைக்கலுற்றுன்
அம்பிகையினுடைய சமிக்ஞையினுல் மகா
அட்டகாஸத்துடன் காளிதேவி

ரத்த பீஜனை சம்ஹரித்து அவன்
ரத்தமெல்லாம் உறிஞ்சி விட்டாள்.
ரத்த பீஜன் பட்டவுடன் பொல்லா
நிசும்பன் பார்த்துக் கோபத்துடன்

சம்ஹரிப்பேன் இவளை என்று சொல்லி
சபதம் செய்து தமையன் முன்னே
தேவியுடன் எதிர்த்து நிசும்பனும்
தோற்காமலே யுத்தம் செய்தான்

யுத்தம் பண்ணத் தெரிந்தவளோ எங்கள்
இத்தனை பேரையும் ஜெயித்தாயேடி
யாருமில்லாதே இருந்தாயடி நீயும்
ஏழுபேருடன் இப்போ நின்ருயடி

ஒருத்தியாக இருந்துக் கொண்டன்ருே நீ
உத்தாரம் சொல்லி அனுப்பிவைத்தாய்
அத்தனை பேர்களைச் சேர்த்துக் கொண்டு
இப்போ அதட்டுகிருயடி நீயும் என்னை

சும்பன் வார்த்தைகளைக் கேட்டு சகிகளை
இங்கே வாருங்கள் என்றழைத்து
வாரியணைத்தாள் சகிகள் எல்லோரையும்
மாரோடு மறைந்து ஐக்யமானுள்

சும்பாசுரனும் காளிகா தேவியும்
தோற்காமலே யுத்தம் பண்ணலுற்ருர்
எத்தனை போதாக யுத்தம் பண்ணுவோம்
என்று காளியும் கோபத்துடன்

சும்பாசுரனை வதைத்தாள் காளியும்
துர்க்காதேவி என்றம்மன் அழைத்தாள்
அத்தனைதேவர்களும் கூடி ஜக
தம்பிகை தன்னை துதிக்கலானுர்

சும்பநிசும்பரை சம்ஹரித்த
துர்க்கா தேவிக்கு நமஸ்காரம்
துக்கம் போக்கியே நாடுதந்த எங்கள்
தேவியுமக்கு நமஸ்காரம்

சண்ட முண்டனை சம்ஹரித்த எங்கள்
சாமுண்டி தேவிக்கு நமஸ்காரம்
ரத்த பீஜனை சம்ஹரித்த எங்கள்
பத்ர காளிக்கு நமஸ்காரம்

## அடையும் பலன்

ஆபத்துகள் ஒன்றும் வாராது
அன்புடன் இதைப்படித்தவருக்கு
பேய்பிசாசு அண்டாது
புத்திர சோகம் அனுபவியார்

தரித்திரங்கள் அனுபவியார்
தீர்க்காயுசையும் நான் கொடுப்பேன்
புத்திர ஸம்பத்தும் நான் கொடுப்பேன்
பக்தியுடன் பாராயணம் செய்தவற்கு

விப்ரர்கள் இதைக் கேட்டால்
வேதசாஸ்திரம் விருத்தியாகும்
க்ஷத்திரியர்கள் இதைக் கேட்டால்
நல்ல ஜெயத்துடனே அரசாள்வார்

வைசியர்கள் இதைக்கேட்டுவிட்டால்
வியாபாரத்தில் வெகு லாபமுண்டாம்
சூத்திரர்கள் இதைக்கேட்டால்
கிருஷித் தொழில் விருத்தியாகும்.

ஸ்திரீகள் பக்தியுடன் படித்தால் இதை
தீர்க்க சுமங்கலியாயிருப்பாள்
கன்னிப்பெண்கள் இதைப்படித்தால்
நல்ல கணவன் தன்னை யடைந்திடுவாள்

நித்தியமாக துதித்தவர்க்கு
நினைத்தவரம் நான் கொடுப்பேன்
வெள்ளி செவ்வாயில் துதித்தவருக்கு
வேண்டும் வரம் நான் தருவேன்

வைசியனும் மகாராஜாவும் தேவியின்
மகிமை கேட்டு மனமகிழ்ந்து
தவமுனிவரின் அனுக்ஞையினல்
ஜகதம்மனை நோக்கி தவம் செய்ய

ராஜனும் தேவி கிருபை அடைந்து தன்
ராஜ்யமடைந்து ஆண்டிருந்தான்
சுமேதஸ் முனியின் ஆசிரமத்தில்
சமாதியும் ஞானவானுயிருந்தான்

# சப்த சதி உத்தராங்கம்



## தேவீ ஸூக்தம்

இதற்கு வாக் ஆம்ருணிய ஸூக்தம் என்றும் பெயர். சப்த சதியின் உத்தராங்கத்தில் இடம் பெறுவது இது.

இந்த தேவி ஸூக்தத்தை அத்தியயனம் செய்யாதவர்கள் ''நமோ தேவ்யை'' முதல் ''ஸர்வோபதேச பக்தி விரும்ர மூர்த்திபி :''வரை இதற்குப் பதிலாக பாராயணம் செய்வது வழக்கம். அம்மாதிரியே ராத்ரீ ஸூக்தத்திற்குப் பதிலாக ''விஸ்வேஸ்வரீம் ஜகத்தாத்ரீம்'' முதல் ''ஹந்து மேதௌ மகா ஸுரௌ'' வரை பாராயணம் செய்வது வழக்கம்.

தேவி ஸூக்தத்தைச் செய்தவள் அம்ப்ருணர் என்ற மகரிஷி யின் பெண் வாக், ஆகவே இதற்கு வாகாம்ருணீத ஸூக்தம் என்றும் பெயர்.

நம் வேதங்களுக்கும், இந்தியப் பெண்மணிகளுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. மிகவும் பழமையானது ரிக்வேதம், அதில் வரும் சில மந்திரங்களைக் கண்டவர்கள் பெண்கள்.

### பெண் ரிஷிகள்

சில ஸூக்தங்களுக்கு பெண்களே ரிஷிகளாக இருக்கின்றனர். ரிக்வேதத்தின் 10-ம் மண்டலத்தில் இம்மாதிரி ஸூக்தங்கள் விசேஷமாக இருக்கின்றன. அதில் ஒன்று வாகாம்ருணீய ஸூக்தம்.

''அஹம் ருத்ரேபிர் வஸுபிச்சராமி'' என்பதற்கு அம்ப்ருண மகரிஷியின் பெண்ணுகிய 'வாக்' என்பவள் ப்ரும்ம விதூஷி (ரிஷி) என்று ஸர்வாநுக்ரமணிகையில் வருகிறது.

இதில் 'வாக்' என்ருல் வாக்காகிய பரப்பிரும்மம் என்பது ஒரு பொருள். இன்னென்று 'வாக்' என்னும் பெயருள்ள பெண்.

பெண் என்று வைத்துக் கொண்டால் ப்ரமாத்மாவோடு இரண்டறக் கலந்து அநுபூதிநிலே பெற்றவள். அந்த நிலேயில்

உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் உலகமும் தானேயாகி எல்லாவற்றிற்கும் அதிதேவதை என்று தன்னை ஆத்ம ஸ்துதி செய்துக் கொள்பவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

அந்த ஸூக்தத்தில் கூறப்பட்டுள்ளதாவது :

''நான் உலகத்திற்கு காரணமாய் வசுருத்திரர்களாகவும் ஆதித்ய விசுவ தேவர்களாகவும் சஞ்சரிக்கிறேன்.

பிரும்ம ஸ்வரூபியாய் மித்ரா வருணர்களையும், இந்திரனையும், அக்னியையும், அச்வினி தேவர்களையும், அந்தந்த ஸ்தானத்தில் நிலைக்கச் செய்கிறேன். உலகத்தின் உருவமாய் எல்லாவற்றையும் என்னுள்ளேயே அடக்கியிருக்கிறேன்.

''த்வஷ்டா முதலிய தேவர்களை உரிய ஸ்தானத்தில் அமைத்து தேவர்களுக்கு ஹவிஸையும் சோமரஸத்தையும் கொடுக்கும் யஜமானருக்கு நான் ஐஸ்வர்யத்தைக் கொடுப்பேன்.

பரப்பிரும்மத்தை அறிந்து என் உருவத்தால் உங்களுக்குத் தெரியப்படுத்துவேன். அதனால் நான் தேவர்களில் முதன்மை பெற்றிருக்கிறேன்.

இப்படி உலகினூடே நிறைந்து பல பாவங்களோடு விளங்கி பஞ்ச பூதங்களையும் தன்னுள் அடக்கிக் கொள்ளும் என்னை தேவதைகள் பல இடங்களில் ஸ்தாபித்திருக்கிறார்கள்.

மனிதன் என் மூலமாகவே சாப்பிடுகிறான், பார்க்கிறான், கேட்கிறான். உயிர் உள்ளவனாக இருக்கிறான். புலன்கள் எல்லாம் என் மூலமாகவே இயங்குகின்றன. என்னை அறிந்துக்கொள்ளாத வர்கள் அழிவார்கள்.

தேவர்களும் மனிதர்களும் வணங்கத் தகுந்த பரப்பிரும் மத்தைப்பற்றி சொல்கிறேன். நான் விரும்பிய எதையும் மிக உயர்ந்த நிலையில் வைப்பேன். நான் ஒரு மனிதனைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தவுடனேயே அவனை பிரும்மாவாகவோ ரிஷியாகவோ, அதிமேதாவியாகவோ இவர்களிலும் மேம்பட்டவ ராகவோ செய்ய என்னால் முடியும்.

கடவுளை வெறுப்பவர்களைத் தண்டிக்க ருத்திரனுக்கு வில்லில் நாணைப்பூட்டித் தருபவள் நானே.

என் பக்தர்களுக்கு அவர்களுடைய விரோதிகளின் சக்தியை ஒடுக்குவேன்.

பூமி வானம் இரண்டிலும் அந்தர்யாமியாகப் புகுந்தேன். என் பிறப்புக்குக் காரணமான அம்ப்ருண மகரிஷி சமுத்திரத்தின் மத்தியில் நீரில் வசிப்பவர். அங்கிருந்தே நான் உலகங்களில் பல விதங்களாகப் பரவியிருக்கிறேன்.

நானே எல்லா உலகங்களேயும் காரண ரூபத்தில் சிருஷ்டிக்கிறேன். காற்றைப்போல சுயேச்சையாக சஞ்சரிக்கிறேன். பூமியையும், வானத்தையும் கடந்தவள் நான்.''

## தேவி ஸூக்தம்

ந்யாஸம்: அஸ்ய ஶ்ரீ அஹமித்யஷ்டர்ச்சஸ்ய ஸூக்தஸ்ய வாகாம்ப் ருணீ ரிஷி: ஸச்சித் ஸுகாத்மக ஸர்வகத: பரமாத்மா தேவதா திவிதீயாயோ ருசே ஜகதீ சிஷ்டானும் த்ரிஷ்டுப்சந்த: தேவி மகாத்ம்ய பாடே விநியோக: ||

ஓம் அஹம் ருத்ரேபிர் வஸுபிச் சராம்யஹ
மாதித்யைருத விச்வ தேவை: |
அஹம் மித்ரா வருணோபா
பிபர்ம்யஹ மிந்த்ராக்னீ அஹமச்விநோபா || 1

அஹம் ஸோம மாஹனஸம் பிபர்ம்யஹம்
த்வஷ்டாரமுத பூஷணம் பகம்
அஹம் ததாமி த்ரவிணம் ஹவிஷ்மதே
ஸுப்ராவ்யே யஜமானாய ஸுன்வதே || 2

அஹம் ராஷ்ட்ரீ ஸங்கமனீ வஸூனும்
சிகிதுஷீ ப்ரதமா யஜ்ஞியானும்
தாம் மாதேவா வ்யதது: புருத்ரா
பூரிஸ்தாத்ராம் பூர்யாவேச யந்தீம் || 3

மயஸோ அன்னமத்தியோ விபச்யதி
ய: ப்ராணிதி ய ஈம் ச்ருணோத் யுக்தம்
அமந்தவோ மாந்த உபக்ஷியந்தி ச்ருதி
ச்ருத ச்ரத்தி வந்தே வதாமி || 4

அஹமேவ ஸ்வயமிதம் வதாமி
ஜுஷ்டம் தேவேபிருத மானுஷேபி:
யம் காமயே தந்த முக்ரம் க்ருணோமி தம்
பிரஹ்மாணம் தம்ருஷிம் தம் ஸுமேதாம் || 5

அஹம் ருத்ராய தனுராதனோமி
பிரஹ்மத்விஷே சரவேஹந்த வாஉ
அஹம் ஜனாய ஸமதம் க்ருணோம்
யஹம் த்யாவாப்ருதிவீ ஆவிவேச || 6

அஹம் ஹுவே பிதரமஸ்ய
மூர்த்தன் மம யோனி ரப்ஸவன் த: ஸமுத்ரே
நதோ விதிஷ்டே புவனானு விச்வோ
தாமூம் த்யாம் வர்ஷ்மணோ பஸ்ப்ருசாமி || 7

அஹ மேவ வாத இவ ப்ரவாம்
யாரபமாணு புவனுனி விச்வா
பரோதிவா பர ஏனுப்ருதிவ்யை
தாவதீ மஹினு ஸம்ப பூவ । 8

(உண்மையில் புலன்களை வென்று உயர்ந்த ஞானத்தை சம்பாதித்து தம்முடைய அறிவை நிறுத்திப் பார்த்தவர்களே இப்படி பேச முடியும்.)

ருக் வேதம் 10-ம் மண்டலம் ஏற்பட்ட காலத்தில்தான் வேத மந்திரங்களுக்கு கௌரவம் அதிகரித்து ''வேத வாக்கே பரப் பிரும்ம ஸ்வரூபம்'' என்ற நம்பிக்கை வேரூன்றியது. இதை அதர்வ வேதமும், யஜுர் வேதமும் உறுதிப்படுத்துகின்றன.

பத்தாம் மண்டலத்தில் இதுபோல பல பெண்கள் ரிஷிகளாக இருந்து ஸூக்தங்களைச் செய்திருக்கிறார்கள். அவற்றில் 39, 40-ம் ஸூக்தங்களுக்கு கட்வாங்கருடைய பெண் கோஷா என்பவள் ரிஷியாக இருந்து அசுவினி தேவர்களை ஸ்துதிக்கிறாள். 72-ம் ஸூக்தத்திற்கு தக்ஷன் குடும்பத்தைச் சேர்ந்த அதிதி ரிஷியாக இருக்கிறாள். 85-ம் ஸூக்தத்திற்கு ஸூர்யா சாவித்ரி என்பவள் ரிஷி. சூரியனுக்கும் சாவித்ரிக்கும் திருமணம் நடப்பதே இதிலுள்ள விஷயம். இதை விவாக ஸ்துதி என்றும் கூறுவதுண்டு. இம் மந்திரங்கள் விவாக காலத்தில் சப்தபதியின் போது வருகின்றன.

109-வது ஸூக்தத்துக்கு ஜூஹி என்பவள் ரிஷி. இவளை நிருக்தமும், பிருஹத் தேவதா என்ற நூலும் தெய்வமாகப் புகழ் கின்றன. 145-ம் ஸூக்தத்திற்கு இந்திராணி ரிஷி. இது மாந்திரிக வித்தை சம்பந்தமானது. ரிக் வேதம் 8-ம் மண்டலம் 91-ம் ஸூக் தத்திற்கு அத்திரி மகரிஷியின் வம்சத்தைச் சேர்ந்த அபலா ரிஷி.

ரிக்வேத காலத்தில் பல பெண்கள் இப்படி ரிஷிகளாக இருந்து ஸூக்தங்களை இயற்றியதற்குக் காரணம் அப்போது பெண்கள் தர்க்கத்திலும், தத்வதிலும், லௌகிக விஷயங் களிலும் பங்கெடுத்துக் கொண்டதே.

## ரகஸ்ய த்ரையம்

மேதஸ் முனிவர் சுரதனுக்கும், சமாதிக்கும் தேவியின் உபாசனை ரகசியங்களைக் கூறுகிறார். இது மூன்று ரகஸ்யங்களாக பிரிக்கப்பட்டுள்ளது.

முதல் ரகசியம் சிருஷ்டிக் கிரமத்தைக் கூறுகிறது. சிருஷ்டிக்குக் காரணமான மூலப்ரக்ருதியைப் பற்றியது. இது பிரதானமாதலால் பிராதானிக ரகசியம் என்ற பெயர் ஏற்பட்டது.

இரண்டாவது ரகசியத்தில் இந்த மூலப்பிரகிருதி எப்படி விக்ருதியானுள். அதாவது மாருத பரம்பொருள் எப்படி மாறி உருவங்கள் எடுத்தது என்பது கூறப்பட்டுள்ளது. ஆகவே விக்ருதி பற்றிய ரகசியம் வைக்ருதிக ரகசியமாயிற்று.

மூன்ருவதான மூர்த்தி ரகசியத்தில் தேவியின் அவதார மூர்த்தங்களைப் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

அம்பா சூலதனு குசாங்குசதர அர்தேந்து பிம்பாதரி
வாராஹி மதுகைடபப் ப்ரசமனீ வாணிரமா சேவிதா
மல்லாத்யாஸுர மூகதைத்ய சமனி மாகேஸ்வரி அம்பிகா
சித்ரூபி பரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேஸ்வரீ

## மூல ஸ்வரூபமும் முக்கிய ஸ்வரூபமும்

முக்குண வடிவினளும், பரமேஸ்வரியுமான மகாலக்ஷ்மி எல்லா வற்றிற்கும் முதற் காரணமாகியவள். உலகம் அனைத்தும் சூன்ய மாக இருக்கக் கண்டு தன் தமோ குணத்தால் ஒரு சிறந்த வடிவு எடுத்துக்கொண்டாள்.

பரதேவதை இந்த தாமஸிப் பெண்ணை நோக்கிக் கூறிய தாவது :—

''உனக்கு மகா மாயை, மகாகாளீ, மகாமாரி க்ஷுதா (பசி), த்ருஷா (தாகம்), நித்ரா (தூக்கம்), த்ருஷ்ணு (ஆசை), ஏக வீரா (நிகரற்ற வீரம்), காலராத்ரீ (காலத்தைக் கடந்து நிற்பவள்) என்ற பெயர் இடுகிறேன். உன் இந்த நாமங்கள் உன் தொழி லால் பிரசித்தியடையப் போகின்றன.

பின் அம்பிகை சுத்தமான சத்வ வடிவு கொண்ட பெண் ஆனுள். அவளுக்கு அளிக்கப்பட்ட நாமங்கள் மகா வித்யா, மகா வாணீ, பாரதீ, வாக்கு, சரஸ்வதி,(ஆர்யா, பிராஹ்மி, காமதேனு, பீஜ கர்ப்பாதீச்வரி (புத்தியை ஆள்பவள்,)

மகாலக்ஷ்மிக்கு உள்ள பெயர்கள் : சர்வா, சண்டிகா, துர்க்கா, பத்ரா, பகவதி, அஷ்ட தச புஜங்களுடன் விளங்குபவள் இவளே.

இம்மூன்று சக்திகளும் பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் இவர்களைக் கொண்டு சிருஷ்டி ஸ்திதி சம்காரத்தை நடத்த லாயினர்.

## வைகிருத ரகஸ்யம்

அஷ்ட தசாபுஜ மகாலக்ஷ்மியை நடுவிலும், இடது பக்கத்தில் 10 கைகளுடன் கூடிய மகா காளியையும், வலது பக்கத்தில் 8 கை களுடன் கூடிய மகாசரஸ்வதியையும் வைத்து பூஜிக்க வேண்டும்.

யதா மத்யே அஷ்டதசாபுஜா
ததா தசானஞே வாமே அஷ்டபுஜா

இவர்களுக்கு வலது பக்கத்திலும், இடது பக்கத்திலும் எல்லா துர் நிமித்தங்களுக்கும் சாந்தியாக கால தேவதையும் மிருத்யு தேவதையும் பூஜிக்கப்பட வேண்டும்.

அஷ்ட புஜ மகா சரஸ்வதியைப் பூஜிக்கும் போது அவர்களுடைய ஒன்பது சக்திகளும் ருத்திரரும், விநாயகரும் பூஜிக்கப்படவேண்டும்.

''நமோ தேவ்யை'' என்ற ஸ்தோத்திரத்தால் மகாலக்ஷ்மியை பூஜிக்க வேண்டும்.

மூன்று பேர்களையும் பூஜிக்கும்போது அந்தந்த சரிதங்களிலுள்ள ஸ்தோத்திரங்களையும் மந்திரங்களையும் உபயோகிக்க வேண்டும்.

அஷ்டாதச புஜ மகாலக்ஷ்மியைப் பூஜித்தாலே மகா காளியையும் மகா சாஸ்வதியையும் பூஜித்ததாக ஆகும்.

தேவிக்கு எதிரில் இடதுபக்கம் தேவியினுல் கொல்லப்பட்டவனும், தேவியினுல் சாயுஜ்ய பதவி அளிக்கப்பட்டவனுமான மகிஷன் பூஜிக்கப்பட வேண்டும். வலது பக்கம் எதிரில் தர்ம ஸ்வரூபமான சிங்கம் பூஜிக்கப்படவேண்டும்.

---

## சமஷ்டி பூஜையில்

| | வலம் | நடு | இடம் |
|---|---|---|---|
| பின் இடம் | கௌரீ<br>ருத்ரன் | பிர்மா<br>சரஸ்வதி | விஷ்ணு<br>லக்ஷ்மி |
| நடு இடம் | 4 கை<br>மகா காளி | 4 கை<br>மகா லக்ஷ்மி | 4 கை<br>மகா சரஸ்வதி |
| முன் இடம் | 10 கை<br>மகா காளி | 18 கை<br>மகா லக்ஷ்மி<br>துர்க்கா | 8 கை<br>மகா சரஸ்வதி |

## தனித்தனி பூஜையாயின்

| | | |
|---|---|---|
| காலன்<br>10 கை மகா காளி | 18 கை மகா லக்ஷ்மி<br>சிங்கம், மகிஷம் | மிருத்யு<br>8 கை மகா சரஸ்வதி |
| காலன்<br>18 கை மகா லக்ஷ்மி | 10 கை<br>மகா காளி | மிருத்யு<br>8 கை மகா சரஸ்வதி |
| காலன், ருத்ரன்<br>18 கை மகா லக்ஷ்மி | 8 கை மகா சரஸ்வதி<br>நவ சக்திகள் | விநாயகர், மிருத்யு<br>10 கை மகா காளி |

## "சப்த சதி"யால் ஏற்படும் பலன் என்ன ?

இந்த கேள்விக்கு தேவியே பதிலளிக்கிருள். பன்னிரண்டாவது அத்யாயமாக இது அமைந்துள்ளது. தேவி கூறுகிருள்:

"இத் துதிகளால் யார் என்னை தினமும் துதிக்கிருர்களோ அவர்களுடையக் கஷ்டங்களை நிச்சயம் போக்குவேன்.

அஷ்டமி, நவமி, சதுர்தசியில் படிப்பவர்களிடம் பாவமே அண்டாது. மகா மாரியால் ஏற்படும் எல்லாக் கஷ்டங்களும் ஆத்யாத்மிக, ஆதி தைவிக, ஆதி பௌதிக தாபங்கள் எல்லாம் இம் மகாத்மியத்தைக் கேட்டாலே விலகும்.

எங்கு இது படிக்கப்படுகிறதோ அங்கு என் சாந்நித்யம் ஸ்திரமாக இருக்கும். பூஜை, ஹோமம், விழா இவைகளில் இம் மகாத்மியம் முழுவதும் படிக்கப்பட வேண்டும், கேட்கப்பட வேண்டும். இதைக் கேட்பதாலேயே சத்துக்கள் ஒழிகின்றனர். குளம் விளங்குகிறது. மங்கலம் ஏற்படுகிறது. பேய் பிசாசுகள் இந்த ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் விலகும்.

யத்ரைதத் பட்யதே ஸம்யங் நித்ய மாயதனே மம
ஸதா நதத் விமோக்ஷ்யாமி ஸாந்நித்யம் தத்ரமே ஸ்திதம்॥

என் ஆலயத்தில் நித்தியம் இது படிக்கப்பட்டால் அங்கு என் ஸாந்நித்யம் நிலவுகிறது.

பலிப்ரதானே பூஜாயா அக்னி கார்யே மஹோத்ஸவே ஸர்வம் மமதைச் சரித முச்சார்யம் ச்ராவ்யமே வச॥

பலிப் பிரதானத்திலும் பூஜையிலும் அக்னி காரியத்திலும், மகோத்ஸவத்திலும் இந்த என் சரிதம் முழுவதும் வாசிக்கவும் கேட்கவும் படவேண்டும்.

இப்படி செய்யப்பட்ட பலிதானத்தையும் பூஜையையும், அக்னி ஹோமத்தையும் ஞானமுடன் செய்யப்பட்டாலும் ஞானமின்றி செய்யப்பட்டாலும் நான் அன்புடன் ஏற்றுக் கொள்கிறேன்."

பசு, புஷ்பம், அர்க்யம், தூபம், தீபம், பிராம்மண போஜனம், ஹோமம், தானம் இவைகளை வருஷம் முழுவதும் செய்வதால் ஏற்படும் பலன் இதை ஒருதரம் படிப்பதாலோ அல்லது கேட்பதாலோ ஏற்பட்டு விடுகிறது.

# சப்த சதி பாராயணம் 5

''யதா வேதோ ஹ்யனுதிர்ஹி
தத்வத் ஸப்த சதீ ஸம்ருதா''

எப்படி வேதம் அனுதியோ அப்படி சப்த சதியும் அனுதியானது என்கிறது புவனேஸ்வரி ஸம்ஹிதை.

''யாகங்களில் எப்படி அஸ்வமேதமோ, தேவர்களில் எப்படி ஹரியோ அதுபோல ஸ்துதிகளில் ''சப்த சதி'' என்று டாமர தந்திரம் கூறுகிறது.

இதைப் பாராயணம் செய்வது மிகவும் விசேஷம்.

ஒரே சமயத்தில் 13 அத்யாயங்களையும் பாராயணம் செய்யலாம். அவகாசம் இல்லாத போது மத்யம சரிதம் மட்டும் படிக்கலாம். அல்லது தொடர்ச்சியாக ஏழு தினங்களில்,

| | | |
|---|---|---|
| முதல் நாள் | — | முதல் அத்யாயம் |
| 2-ம் நாள் | — | 2, 3 அத்யாயங்கள் |
| 3-ம் நாள் | — | 4-ம் அத்யாயம் |
| 4-ம் நாள் | — | 5, 6, 7, 8 அத்யாயங்கள் |
| 5-ம் நாள் | — | 9. 10 அத்யாயங்கள் |
| 6-ம் நாள் | — | 11-வது அத்யாயம் |
| 7-ம் நாள் | — | 12, 13 அத்யாயங்கள் |

எனப் பாராயணம் செய்யலாம்.

''ஞானினமபி சேதாம்ஸி'', ''துர்க்கே ஸம்ருதா'', ''ஸர்வ பாப ப்ரசமனம்'' போன்ற மந்திரங்களைத் தனியாக ஜபம் செய்தால் அந்தந்த மந்திரத்திற்கு அனுகுணமான மூர்த்தியை அந்தந்த சரித்திரத்தில் கூறியபடி நியாஸமும், தியானமும் செய்து அதற்கிசைந்தபடி ''விஸ்வேஸ்வரீம் ஜகத்தாத்ரீம்'', ''சக்ராதாய ஸுரகண:'' அல்லது ''நமோ தேவ்யை மஹா தேவ்யை'' என்ற ஸ்துதியைச் சொல்ல வேண்டும்.

## ஒன்பது வகை பாடக் கிரமங்கள்

பாராயணம் செய்வதில் ஒன்பது வகைப் பாடக் கிரமங்கள் உள்ளன.

1. மூன்று சரிதங்களையும் வரிசையாகப் பாராயணம் செய்வது ''மகா வித்யா'' பாடக் கிரமம்.

2. முதல் சரிதம், மூன்ருவது சரிதம், பின் மத்யம சரிதம் என்று பாராயணம் செய்வது ''மகா தந்திரப் பாடக் கிரமம்.''

3. முதலில் மத்யம சரிதம், பின் பிரதம சரிதம், உத்தம சரிதம் என்று பாராயணம் செய்வது ''சப்த சதீ பாடக் கிரமம்.''

4. உத்தம சரிதம், பிரதம சரிதம், மத்யம சரிதம் என்ற முறை ''மிருத சஞ்சீவினி பாடக் கிரமம்.''

5. உத்தம சரிதம், மத்யம சரிதம், பிரதம சரிதம், என்று பாராயணம் செய்வது ''மகா சண்டி பாடக்கிரமம்''.

6. சண்டி மந்திரத்தை சம்புடமாகச் சேர்த்து முதல் சரிதம் மத்யம சரிதம் உத்தம சரிதம் என்று பாராயணம் செய்வது ''சண்டி பாடக்கிரமம்''.

7. ''ரூபம் தேஹி, ஜயம் தேஹி'' என்ற மந்திரத்தையும், நவாக்ஷரியையும் சம்புடமாக சேர்த்து முறையே பாராயணம் செய்வது ''ரூபசண்டி பாராயணக் கிரமம்''.

8. 64 யோகினி மந்திரங்களேயும் சம்புடமாக சேர்த்து பாசுாயணம் செய்வது ''பரா சண்டீ பாடக் கிரமம்'' எனப் படும்.

9. இந்த எட்டு வகைகளேத் தவிர சப்த சதியை 700-வது மந்திரம் (சுலோகம்) தொடங்கி முதல் மத்திரத்தில் முடியும்படி விபரீதக் கிரமத்தில் பாராயணம் செய்யும் முறையும் உள்ளது.

மகா வித்யா பாடக்கிரமம் (1) மிருத சஞ்சீவினி பாடக் கிரமம் (4) விபரீதக் பாடக் கிரமம் (கடைசியில் குறிப்பிட்டது). இம்மூன்றும் சிருஷ்டிக் கிரமம், ஸ்திதிக் கிரமம், சம்ஹாரக் கிரமம் என்று சொல்லப்படும்.

செல்வம், புத்திரபேறுக்கு சிருஷ்டிக் கிரமமும் சகல போகங் களும் பெற ஸ்திதிக் கிரமமும், மோக்ஷம் பெற சம்ஹாரக் கிரமமும் சிலாக்யமானது.

### "சம்புடீகரணம்" என்ருல்......

ஒவ்வொரு மந்திரத்தின் ஆரம்பத்திலும், முடிவிலும் காமனேக்கு ஏற்றதாகச் சொல்லப்பட்டிருக்கும் பீஜாக்ஷரத்தையும் மஹாத்மியத்திலுள்ள ரூபம் தேஹி போன்ற ஒரு மந்திரத்தையோ சேர்த்துச் சொல்வது 'சம்புடம்'. எதுவும், ஆரம்பத்தில் மட்டும் சேர்த்துச் சொல்வ ''பல்லவம்'' எனவும், கடைசியில் மட்டும் சேர்ந்துச் சொல்வது ''ஸம்போஜனம்'' எனவும் கூறப்படும்.

பாராயணம் செய்யு முன் ரிஷி, சந்தஸ், தேவதைகளைக் குறிப்பிட வேண்டும்.

| | பிரதம | மத்யம | உத்தம |
|---|---|---|---|
| ரிஷி | பிரும்மா | விஷ்ணு | ருத்திரன் |
| சந்தஸ் | காயத்ரீ | உஷ்ணிக் | அனுஷ்டுப் |
| தேவதை | மகா காளி | மகா லக்ஷ்மி | மகா சரஸ்வதி |
| சக்தி | நந்தா | சாகம்பரீ | பீமா |
| பீஜம் | ரக்த தந்திகா | துர்க்கா | ப்ராமரீ |
| தத்வம் | அக்னி | வாயு | சூர்யன் |
| தியானம் | ரிக் | யஜுர் | சாம |

சப்த சதி படிக்கும் முறை பற்றி வாராஹி தந்திரத்தில் குறிப்பிட்டுள்ளதாவது :

யாவந் ந பூர்யதேத்யாய : தாவந் ந விரமேத் படந் ।
யதி ப்ரமாதாத் அத்யாயயே விராமோ பவதி ப்ரியே ॥

புனரத்யாய மாரப்ய படேத் ஸர்வம் முஹுர் முஹு : ।
அனுக்ரமாத் படே தேவ ஶிர : கம்பாதிகம் த்யஜேத் ॥
நமாஸனம் படேத் ஸ்தோத்திரம் வாசிகம் து ப்ரஶஸ்ய தே ॥

படிக்கும்போது ஒரு அத்யாயத்தை முடிக்காமல் நடுவில் நிறுத்தக் கூடாது. அப்படி நிறுத்த நேர்ந்தால் மறுபடியும் ஆரம்பித்துப் படிக்க வேண்டும். வரிசைக்கிரமமாகப் படிக்க வேண்டும். தலையசைத்தல் அங்கச் சேஷ்டைகள் கூடாது. வாய் விட்டு மெதுவாக உச்சரித்துப் படிக்கவேண்டும்.

## பாராயணக் கிரமம்

ஆசமனம், கணபதி தியானம், பிராணுயாமம் சங்கல்பம் சுபே சோபனே.........அஸ்யாம் சுபதிதௌ, மமோ பாத்த சமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீ துர்க்கா லக்ஷ்மீ சரஸ்வதி ப்ரீத்யர்த்தம் அஸ்மாகம் ஸர்வேக்ஷாம் சகுடும்பானும் க்ஷேமஸ்தைர்ய வீர்ய விஜய ஆயுராரோக்ய ஐஸ்வர்யாபிவிருத்யர்த்தம் சமஸ்த மங்களா வாப்யர்த்தம்.

கவச, அர்க்கல, கீலக படன நவாக்ஷரீ மந்திர ஜப, ராத்ரீ ஸூக்த படன பூர்வகம் நவாக்ஷரி மந்திர ஜப தேவீ ஸூக்த ரகஸ்யத்ரய படனுந்தம் ஸ்ரீ தேவி மகாத்ம்ய பாராயணம் கரிஷ்யே ॥

சப்த சதி பாராயணம் ஆரம்பிக்கு முன் ஸித்த குஞ்சிகா மந்திரம் 3 தடவை.

ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே |

ஓம் க்லௌம் ஹூம் ஜூம்ஸ: ஜ்வாலய ஜ்வாலய ஜ்வல ஜ்வல ப்ரஜ்வல ப்ரஜ்வல |

ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே ஜ்வல ஹம் ஸம் லம் க்ஷம் பட் ஸ்வாஹா ||
என்று சொல்லவும்.

சாபானுக்ரஹ மந்திரம் 7 தடவை.

ஓம் ஹ்ரீம் க்லீம் ஸ்ரீம் க்ராம் க்ரீம் சண்டிகா தேவி சாபா நாடானுக்ரஹம் குரு குரு ஸ்வாஹா ||

சாப உத்கீலனமந்திரம் 21 தடவை.

ஓம் ஸ்ரீம் க்லீம் ஹ்ரீம் சப்தசதி சண்டிகே உத்கீலனம் குரு குரு ஸ்வாஹா ||

கவசம், அர்க்களம், கீலகம், நவார்ணஜபம், ராத்ரி ஸூக்தம், சப்தசதி நியாஸம், சப்தசதி பாராயணம், உத்தர நியாஸம், தேவீஸூக்தம், நவாக்ஷரீஜபம், ரகஸ்ய த்ரயம், அபாராதக்ஷமா ஸமர்ப்பணம்-இதி சப்த சதி பாராயண விதி.

இந்த 700 சுலோகங்களில் ஒவ்வொன்றும் ஒரு மந்திரமே. அவரவர்களின் விருப்பத்திற்கேற்ப ஒவ்வொரு மந்திரத்தையும் குறிப்பிட்ட அளவுக்கு ஜபம் செய்யலாம். அல்லது மந்திரத்தை சம்புடமாகச் சேர்த்து சப்த சதியை ஜபிக்கலாம்.

இந்த காம்யப் பிரயோகங்கள் துர்க்கோபாஸன கல்பத்ருமம், டாமரி தந்திரம், காத்யாயனீ தந்திரம், சிதம்பர ஸம்ஹிதா, மரீச கல்பம், மேரு தந்திரம், புவனேஸ்வரி தந்திரம், க்ரோட தந்திரம், ருத்ரயாமளம். முதலிய தந்திரங்களில் காணப்படுகின்றன.

தேவி மகாத்மியத்திற்கு சாந்தனவீ, புஷ்பாஞ்சலி, ராமாச்ரமீ, நாகேசீ, குப்தவதீ, தம்சோத்தாரம், துர்க்கா ப்ரதீபம், சப்தசதி சர்வஸ்வம் முதலிய வியாக்யானங்கள் உள்ளன. அவைகளிலும் காம்யப்பிரயோகங்கள் கூறப்பட்டுள்ளன,

## சப்த ஸ்லோகீ

சப்த சதியைப் பாராயணம் செய்ய முடியாதவர்கள் துர்க்கா சப்த ஸ்லோகியையாவது தினம் பாராயணம் செய்ய வேண்டும்.

சில தனிப்பட்ட மந்திரங்கள் ஏழு கொண்டது இந்த சப்த ஸ்லோகீ.

ஒரு சமயம் பரமேஸ்வரன் பார்வதியைப் பார்த்து, ''இக் கலியில் எல்லாக் காரியங்களும் சித்தி பெற ஒரு உபாயத்தைச் சொல்'' என்று கேட்டாராம்.

தேவி 700 மந்திரங்கள் அடங்கிய இந்த சப்த சதியிலிருந்து 7-சுலோகங்களைப் பொறுக்கிக் கூறி, ''இதைப் பாராயணம் செய்தால் இக் கலியில் எல்லா காரியங்களும் கைகூடும்'' என்று அருள் புரிந்தாள். அதுவே சப்த ஸ்லோகீ.

1. முதல் சரிதத்திலுள்ள சுலோகம் (ராஜவச்யம்)
ஞானிஞமபி சேதாம்ஸி தேவீ பகவதி ஹிஸா ।
பலா தாக்ருஷ்ய மோஹாய மஹா மாயா ப்ரயச் சதி ॥

2. மத்யம சரிதத்திலுள்ள சுலோகம் (சர்வ ஆபத்தும் நீங்கும்.

துர்க்கே ஸ்மிருதா ஹரஸி பீதி மசேஷ ஜந்தோ ஃ
ஸ்வஸ்தைஸ் ஸ்மிருதா மதிம் அதீவ சுபாம் ததாஸி।
தாரித்திர்ய துக்க பய ஹாரிணி காத்வதன்யா
ஸர்வோப கராய கரஞய ஸதார்த்ர சித்தா ॥

3. உத்தம சரிதத்திலுள்ள சுலோகம் (சகல சௌபாக்கியங்கள்.)

ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே சர்வார்த்த ஸாதகே
சரண்யே த்ரயம்பிகே கௌரீ நாராயணீ நமோஸ்துதே॥.

பின்கண்ட நான்கு சுலோகங்களும் உத்தம சரிதத்திலுள்ளது (சகல துன்ப நிவர்த்தி, மகா பய நிவர்த்தி, பிணி நிவாரணம், சபையில் வெற்றி.)

4. சரஞகத தீனர்த்த பரித் ராண பராயணே ।
சர்வஸ் யார்த்திஹரே தேவி நாராயணி நமோஸ்துதே ॥.

5. ஸர்வஸ்வரூபே ஸர்வேசி ஸர்வ சக்தி சமன் விதே
பயேப்யஸ் த்ராஹிநோ தேவி துர்க்கா தேவி நமோஸ்துதே ॥

6. ரோகானசேஷான் அபஹம்ஸி துஷ்டா ருஷ்டாது காமான் ஸதுலானபீஷ்டான் ।
த்வா மாச்ரிதாஞம் நவிபந்நராஞம், த்வா மாச்ரிதா ஹ்யாச் ரயதாம் ப்ரயாந்தி ॥

7. ஸிம்ஹ நா தேன சும்பஸ்வ வ்யாப்தம் லோகத்ரயாந்தரம்
நிர்காத நிஸ்வனே கோரோ ஜீதவான் அவனீபதே ।

# சப்த சதியில் முக்ய சக்திகள் 6

ஸங்கல்ப ரக்த கணபான விவ்ருத் தரூக்யா
ஜாக்ரத் ஸ்மாதி கலயே ஶ்வரி தேவிபூத்யா |
மூலாக்னி சண்ட சசி முண்ட தனுத்தா பேத்ர்யா
சாமுண்டாயா தனுஷு தேவி நகிம் க்ருதம் ஸ்யாத்

—உமா ஸகஸ்ரம்
(காவ்ய கண்ட கணபதி முனிவர்)

சண்டன், முண்டன் என்ற அசுரர்கள் மனித உடலில் மூலா தாரத்தில் உக்கிரமாக (சண்ட) எரியும் அக்னியையும், சகஸ் ராரத்தில் (முண்ட) இருக்கும் சந்திரனையும் குறிப்பர். யோக சக்தி பெறுதவர்களுக்கும் இந்த சண்ட, முண்ட பெரும் தடை செய் கிறது. இவை அனுகூலமாக கிரந்தி பேதனம் ஏற்பட வேண்டும். இதுவே குண்டலினி யோகம்.

சாமுண்டா என்ற எப்போதும் விழித்திருக்கும் சக்தியே மூலாதார சகஸ்ரார கிரந்திகளைப் பிளந்து தேவியின் விஜயத் திற்கு வழி செய்கிறுள்.

மனதில் இடையருது தோன்றும் எண்ணங்களே ரக்த பீஜர்கள். இந்த ரக்த பீஜர்களைக் கபளீகரம் செய்பவள் சாமுண்டா, மனதில் தோன்றும் எண்ணங்களை விழுங்கி மனதை நிஸ்சலமாக செய்வதே சாமுண்டாவின் ஆற்றல்.

இந்த சப்த சதியில் கூறப்படும் முக்ய தேவதைகள் மகாகாளி, மகா லக்ஷ்மி, மகா சரஸ்வதி.

## மகா காளி

இவள் பிரதம சரித நாயகி. பிரளயத்தைப் போல பிரும்ம சக்தி ஒன்றைத் தவிர வேறு எதுவுமே கிடையாது. அந்த பிரும்ம சக்தி இவளே.

இவள் ஆற்றல் வடிவினள். இடையூறுகளைத் தவிர்த்து, புயல் போல் பாய்ந்து, கனல் போல பரவி பாபத்தைப் பொசுக்கி சாதகனை மல்லுக்கட்டாக லட்சியத்தை அடையச் பெய்பவள். சோம்பல், அலட்சியம் இவைகளைப் பொறுக்க மாட்டாள்.

பயங்கரமானவள் என்றாலும் தாயின் கருணை உள்ளம் படைத்தவள். இவளிடம் அன்பு கொண்டவர்களுக்குப் பயம் என்பதே இல்லை.

இவளுக்கு பத்து முகம், பத்து கால்கள், பத்து கைகள், திசைகள் எட்டு, மேல், கீழ் இரண்டு ஆக பத்து. காலத்தைக் கடப்பது போல இவள் இடத்தையும் கடந்தவள். ஆகவே அதை குறிக்கவே இந்த பத்து எண்ணிக்கை. பத்து என்றால் ஆனந்தம் என்றே பொருள் கொள்ள வேண்டும். இவளுடைய திருவுருவம் பின் அட்டையில் காணலாம். இவளே ''க்லீம்'' என்பதை பீஜாக்ஷரமாகக் கொண்ட ஆனந்த ஸ்வரூபிணி.

## மகா லக்ஷ்மி

எல்லா தேவதைகளின் சக்தியும் ஒன்று திரண்டு உருவானவள் இத்தேவி. நிலைத்து நிற்கும் பேரழகு, அனைத்தையும் வசீகரித்து தெய்வ ஸ்ருதியுடன் இசையச் செய்தல் ஆகியவை இவளின் ஆற்றல்கள். மனித மனதை மயக்கும் மோகினி இவள்.

இவள் நிலைபெற வனப்பு, தூய்மை, வாக், மனது, சுத்தம், செய்யும் செயல்களில் அந்தரங்க சுத்தி, சுத்தம், அழகு, இவை அவசியம், ஏதாவது ஒன்று குறைந்தாலும் அகன்று விடுவாள். இவள் அருள் வாழ்வை பரிமளிக்கச் செய்யும்.

மகா ப்ரளய காலத்தில் மகா லயத்திற்கு முன் மகாலக்ஷ்மியாக அவதரித்தாள். மகத்தான லக்ஷியம் எதுவோ அதுவே உருக்கொண்டவள். ஆதலால் மகாலக்ஷ்மி எனப்பெயர் பெற்றாள். ஞானம் பெறுவதே முக்ய லக்ஷ்யம். பிரும்மத்தின் ஞான வடிவமே அவள். ''சத்'' ஸ்வரூபிணி.

இவளே பதினெட்டு கைகளுடன் கூடிய அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மியாக விளங்குகிறாள். காளியும், சரஸ்வதியும் இவளுள் அடங்கியவள். கருணையும், சக்தியும், வீரமும் ததும்பும் நிலை, இவள் பீஜாக்ஷரம் ஹ்ரீம். இவள் திருவுருவத்தைப் பின் அட்டையில் பார்க்கலாம்.

## மகா சரஸ்வதி

மகா சரஸ்வதியே சித் சக்தி ஸ்வரூபிணி. சலியாத உழைப்பு பூரணம் பெற ஏற்பாடு செய்வது, செய்வதை திருந்தச் செய்வது, எதிலும் திறமை இவளது ஆற்றல்கள். மெதுவாகவே செயல்படுபவள். எல்லா சக்திகளையும் விட இவளே மனிதனிடம் மிகப் பெருமையுள்ளவள்.

இவள் புன்னகை நம் மன இருளைப் போக்கும். எல்லா சக்திகளும் பூரணமடைய இவளையே நாடுகின்றன. இவள் பீஜா

க்ஷரம் ''ஐம்''. இவள் திருஉருவத்தைப் பின் அட்டையில் காணலாம்.

## மகேஸ்வரீ

இந்த மூன்று பேர்களுக்கும் மேலே துரீயமாக மகேஸ்வரி விளங்குகிறுள்.

''மேதாஸி தேவி விகிதாகில சாஸ்த்ர ஸாரா ।''

இவள் மனதில் ஜோதி வெள்ளம் பாயச் செய்கிறுள். பரம அறிவு வடிவமாக இருப்பவள். இவள் கருணையை அளவிட முடியாது. இவள் பக்தனைத் தள்ளி ஒதுக்கி வைத்தாலும் பிற்பாடு அவனைக் கவனித்துக் கொள்ளலாம் என்பதே இவளுக்குள்ள எண்ணம். இவள் கொடுக்கும் தண்டனையும் இவள் அருளே. இவள் உருவை ''துர்காஸி துர்க பவ ஸாகர நௌரஸங்கா'' என்பது விளக்குகிறது. பவக் கடலுக்கு மரக்கலமாக நிற்பவள் இவள்.

## ஆதாரம் ஆதி பராசக்தியே

யஸ்யா ஃ பரதரம் நாஸ்தி
ஸைக்ஷா துர்க்கா ப்ரகிர்த்திதா ।
துர்க்காத் ஸம்ஸ்ராயதே யஸ்மாத்
தேவி துர்க்கேதி கத்யதே ॥

உலகம் அனைத்துக்கும் மகா லக்ஷ்மி துர்க்கா தேவி என்ற ஆதி பராசக்தியே முதலானவள். அவள் முக்குணங்களைப் பெற்றவள். அக் குணங்களால் பாதிக்கப்படாதவள் (குணதீதை.) இருந்தும் அந்தந்த குணங்களுக்கான வடிவங்களை எடுத்துக்கொண்டாள்.

தமோ குணப் பிரதானமான அம்சம் அவள் எடுத்ததை,

''பபார ரூபமாரம் தமஸா கேவலேன ஹி''

என்கிறது மந்திர சாஸ்திரம். அப்போது அம்பிகை மகா மாயா, மகாகாளீ, மகா மாரி என்று விளங்குகிறுள்.

அடுத்து ஸத்வ குண அம்சமாக அம்பிகை வடிவெடுக்கிறுள்.

ஸத்வாக்யேன அதி ஸுத்தேன
குணேந்து ப்ரபம் ததௌ ।

சத்வமெனப்படும் மிகத் தூய்மையான பூர்ண நிலவின் ஒளி போன்று அவள் பிரகாசிக்கிறுள். அப்போது மகா வித்யா, மகாவாணீ, பாரதி, சரஸ்வதி முதலிய திருநாமங்களுடன் விளங்குகிறுள்.

கௌரீயின் தேகத்திலிருந்து தோன்றி சத்வகுணப் பிரதான மாக சரஸ்வதி என்ற நாமத்துடன் சும்ப நிசும்பர்களை வதம் செய்தாள்.

கௌரீ தேகாத் ஸமுத் பூதா
யா ஸத்வைக குணாஶ்ரயா
ஸாக்ஷாத் ஸரஸ்வதி புரோக்தா
ஶும்பாசுர நிபர்ஹிணீ ॥.

இம்மூன்று வடிவங்களும் ஒன்றுனத் தோற்றமே அஷ்டாதச புஜ மகாலக்ஷ்மி துர்க்கா தேவி. இந்த அம்பிகையை வணங்குபவர்கள் எல்லா உலகங்களுக்கும் பிரபுவாக விளங்குவர் என்று பல ச்ருதிக் கூறுகிறது.

ஸர்வ தேவ மயீம் ஶாம்
மஹாலக்ஷ்மீ மிமாம் ந்ருப
பூஜயேத் ஸர்வ தேவானும்
ஸ லோகனும் பிரபுர்பவேத் ॥

இந்த அம்பிகை உலகெங்கும் எல்லாப் பொருள்களிலும் வியாபித்து அப்பொருள்களாகவே விளங்குகிறுள்.

அத்தேவி ஸாயுஜ்ய நிலையை அவள் பக்தர்களுக்கு அளிக்கட்டும். இனி இவளது சக்தி அம்சங்களைப்பற்றி தெரிந்துக் கொள்வோம்.

## ஒன்பது வகை துர்க்கா தேவிகள்

சப்த சதி தேவி கவசத்தில் துர்க்காதேவி ஒன்பது பேதமுடையவளாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறுள்.

1. சைலபுத்ரி : இமவான் மகள் பார்வதி. தவத்தின் மூலமே பகவானை அடைய முடியும் என்பதை நிரூபித்துக் காட்டியவள்.

2. பிரும்மசாரிணி : பிரஹ்ம ரூபிணி. ஜகத்தை எல்லாம் ஈன்ற தாயாக இருந்தாலும் கன்னி இவள். (கன்னியகா பரமேஸ்வரி) கருணையின் ஸ்வரூபம்.

3. சந்திர கண்டா : "சந்த்ரோ ஹஸ்த கதாயாம் கண்டாயாம் ஸஸ்யா" முகம்மட்டும்தான் சந்திரன் என்பதல்ல. கண்டமும் சந்திரனைப் போலவே ஒளியுடன் திகழ்பவள். குளிர்ந்த நெஞ்சத்தினள்.

சந்திர கண்டா, யம கண்டா, சித்ர ஘ண்டா—கண்டா என்பது மணி நாதத்தைக் குறிக்கும்.

சந்திரன்—இன்பத்திற்கு அதிபதி.

யமன்—அனைத்தையும் கட்டுப்படுத்துபவன். வாக்கை ஸ்தம்பனம் செய்பவன். (இது பகலாமுகி சக்தி). சித்ர கண்டா (விசித்திரமான பல்வேறு நாத வடிவினள்.

4. கூஷ்மாண்டா : கு. பூமி, உஷ்மா—உஷ்ணம், அண்டா—முட்டை (வித்து, பீஜம்). பறவை முட்டையை அடைகாத்து குஞ்சு பொரிப்பது போல இந்த சக்தி பிரும்மாண்டத்திற்கு உயிரூட்டினுள். கூஷ்மாண்டம் என்பது பூசனிக்கு ஒரு பெயர். இதன் காய் கொடியில் காய்க்கும். பூசனிக்காய் கனமாக இருப்பினும் கொடிக்கு அது பாரமில்லை. அதுபோல பாபிஷ்டிகளான நமக்கு அருள்வதும் அம்பிகைக்கு பாரமில்லை.

5. ஸ்கந்த மதா :—மேலெழுந்த வாரியான அர்த்தம் ஸ்கந்தன் எனப்படும் முருகனின் அன்னை. ஸ்கந்தம் என்ருல் கிளை. வேதமான விருக்ஷத்திற்கு நான்கு பெரும் கிளைகள். அதாவது வேதஸ்வரூபிணி.

6. கா யாயினி :—காத்யாயன ரிஷிக்கு குமாரியாகப் பிறந்தவள். என்றும் கன்னிகை; நித்ய குமரி; கன்னிப் பெண்களால் வழிபடப்படுவள்.

7. காலராத்ரீ :—காலத்தையே விழுங்கி ஒரே ராத்ரியாக விளங்குபவள்.

8. மகா கௌரீ :—ஸ்வர்ண மயமானவள். சுவாஸினிகள் வழிபடும் தேவதை.

9. ஸித்திப் பிரதா :—மோக்ஷத்தை அளிப்பவள். அஷ்டமா சித்திகளும் கைகூட அருளுபவள். ஸித்தி தாத்ரீ என்றும் பெயர் இவளுக்கு உண்டு.

துர்க்கோபாஸனு கல்பத்ருமத்தில் ஜயா, விஜயா, பத்ரா, பத்ரகாளீ, ஸுமுகி, துர்முகீ, பிரக்ஞா, வியாக்ரமுகி, சிங்கமுகி என்று ஒன்பது வகையாக துர்க்கா தேவி கூறப்பட்டிருக்கிருள்.

ஆகமங்களில் வன துர்க்கை, ஜல துர்க்கை, வன்னி துர்க்கை, ஸ்தூல துர்க்கை, விஷ்ணு துர்க்கை, பிரும்ம துர்க்கை, ருத்ர துர்க்கை, மகா துர்க்கை, சூலினி துர்க்கை என்று ஒன்பது வகையாகக் கூறப்பட்டுள்ளது. இந்தவித பேதங்களுக்கெல்லாம் தனித்தனி மந்திரங்களும் தியானங்களும் சாரதா திலகம், மந்திர மஹார்ணவம், மந்திர மஹோததி முதலியவற்றில் விரிவாகக் காணலாம். (விவரங்களுக்கு பிரதிபாவின் 'ஸ்ரீ நவதுர்க்கா'வைப் பார்க்கவும்.)

## திக்தேவதை சக்திகள்

| | |
|---|---|
| கிழக்கு | —இந்திராணீ |
| அக்னி மூலை | —அக்னி சக்தி (உல்கா) |
| தெற்கு | —வாராஹி (யம சக்தி) |
| நிருதி மூலை | —கட்கதாரிணி |

| | |
|---|---|
| மேற்கு | —வாருணீ சக்தி |
| வாயு மூலே | —வாயு சக்தி (ம்ருக வாகினி. மிருக என்ருல் மான்) |
| வடக்கில் | —கௌமாரி |
| ஈசான மூலே | —சூலதாரிணி |
| மேலே | —பிருஹ்மாணி |
| கீழே | —விஷ்ணு சக்தி |

இந்த பத்து திசைகளுக்கும் தேவதை சாமுண்டா. இவள் பிரேதத்தின் மீது இருப்பவள்.

| | | |
|---|---|---|
| முன்பக்கம் | — | ஜயா சக்தி |
| பின் பக்கம் | — | விஜயா சக்தி |
| இடது பக்கம் | — | அஜிதா |
| வலது பக்கம் | — | அபராஜிதா |

## பிரதம சரித சதி தேவிகள்

சதி என்பதற்கு என்னும் நிலேத்துள்ள என்ற அர்த்தம் உண்டு. அப்பேர்ப்பட்ட சக்திகள் :

மகாவித்யா :—தத்வமஸி முதலிய மகா வாக்கியங்களால் உபதேசிக்கப்படும் பிரும்ம வித்யை.

மகா மாயை :—மகா ஞானிகளின் சித்தத்தையும் மோகிக்கச் செய்யும் மாயை.

மகா மேதை : புத்தி சைதன்யரூபம்;

மகா ஸ்ம்ருதி: எல்லா ஸ்ம்ருதிகளுக்கும் மேம்பட்டவள்.

மகா மோக : மோகஸ்வரூபிணி,

மகாதேவீ : சகல தேவ சக்தி ஸ்வரூபிணி.

மகாஸுரி : அசுர சக்தியைஅழிப்பவள்.

## மத்யம சரித சதி தேவிகள்

லக்ஷ்மி, லலிதா. காளி, துர்க்கா, காயத்ரீ, அருந்ததி. சரஸ்வதி ஆகியவர்கள் சதி தேவிகள்.

| | |
|---|---|
| லக்ஷ்மி | —மோக்ஷம் என்ற லக்ஷியத்தை அருளுபவள். |
| லலிதா | —சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரததை விளேயாட்டாக செய்பவள். |
| காளி | —காலத்தை வெல்ல அருளுபவள். |
| துர்க்கா | —தொல்லேகள் போக்கடிப்பவள். |
| காயத்ரீ | —வேத சாரமான நாத ரூபிணி |
| அருந்ததி | —கற்பின் அணிகலன் |
| சரஸ்வதி | —வாக்கு அறிவு இவைகளே அருளுபவள் |

## உத்தம சரித சதிதேவிகள்

அஷ்ட சக்திகளான பிராஹ்மி, மகேஸ்வரி, கௌமாரி. வைஷ்ணவி, வாராஹி, மாகேந்த்ரி, சாமுண்டா, மஹாலக்ஷ்மி இவர்கள் உத்தம சரித சதிதேவிகள்.

### 1, பிராஹ்மி (பிரும்ம சக்தி)

ஹம்ஸயுக்த விமானஸ்தே பிரஹமாணீ ரூபதாரிணி

கௌரி சாம்ப க்ஷரிகே தேவி நாராயணீ நமோஸ்துதே ||

பிராஹ்மி (பிருஹ்மாணி) ரூபம் தரித்து, ஹம்ஸம் பூட்டிய விமானத்தில் வீற்றருந்து, தர்ப்பை புல்லால் நீரைத் தெளிப் பவளே, தேவி நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

அம்பிகையின் ஒரு அம்சம் பிரும்ம சக்தி. சிருஷ்டி ஆற்றல் பெற்றது. பிரும்ம பத்தினியான சரஸ்வதி ரூபமாக இருப்பவள். ஆகவே பிராஹ்மி. வாகாத்மகமான ரூபத்தோடிருப்பவள். பிராம்ஹணீ என்பதற்கு பரமசிவனின் பத்னி என்றும் பெயர்.

பிராம்ஹணீ பஞ்ஜிகா ஸ்ப்ருக்கா த்வி ஜபரி நீஷுவிச்ருதா || என்ற விச்வ கோச வசனப்படி பிராம்ஹணீ என்ற பதமானது. ஒரு ஓஷதி விசேஷத்தையும் ஸம்வித் (ஞான) விசேஷத்தையும் குறிக்கும். இவள் வெள்ளைத் தாமரையில் ஞான ரூபியாக விளங்குவதை,

''பிராம்ஹணீ ச்வேத புஷ்பாட்யா ஸம்வித்ஸா தேவாத்மிகா'' என்கிறது ஸமயாசார ஸ்மிருதி.

இவள் பிரஹ்மானந்தத்தை உடையவள் ஆதலால் பிரஹ்மானந்தா என்ற ஒரு நாமமும் இவளுக்குண்டு.

இவளே கலாதேவி. கல்வி கேள்விகளில் சிறந்தவனுக விளங்க இந்த அம்பிகையின் தயவு வேண்டும். இவள் வாகனம் அன்னப் பறவை. சத்துவ குணத்திற்குப் பேர் போன தெய்வப் பறவை.

### 2. மகேஸ்வரி (சிவ சக்தி)

த்ரிசூல சந்த்ரா ஹிதரே மஹா வ்ருஷப வாஹினி
மாகேஸ்வரி ஸ்வரூபேண நாராயணீ நமோஸ்துதே

மகேஸ்வரி ஸ்வரூபம் கொண்டு, திரிசூலமும், பிறை மதியும், அரவமும் தரித்து, ரிஷப வாகனத்தில் எழுந்தருளும் நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

மகேஸ்வரன் பரமசிவனுடைய பத்னீ மாகேஸ்வரி.

யோ வேதா தௌ ஸ்வர ஃ ப்ரோக்தா ஃ வேதாந்தே ச ப்ரதிஷ்டித ஃ |
தஸ்ய பிரக்ருதி லீனஸ் ய ய ஃ பா ஃ ஸ மஹேச்வர ஃ ||

என்கிற ச்ருதி வாக்யத்தில் குறிக்கப்பட்ட மஹேஸ்வரன் திரிகுணுதீதமானதும் நிர்குணமானதுமான ஸ்வருப முடையவர். அப்பேர்ப்பட்டவரின் ஈஸ்வரி அவரைப் போலத்தானே இருப்பாள்.

''மஹதீ'' என்ருல் அளவிட முடியாத பெரும் சரீரத்தை யுடையவள் என்று அர்த்தம்.

பிருஹதஸ்ய சரீரம்யத் அப்ரமேயம் ப்ரமாணத ஃ |
தாதுர் மஹேதி பூஜயாம் மஹாதேவி தத ஃ ஸ்ம்ருதா ||

என்கிறது தேவி புராணம்.

கண்ட இயல் சக்ர தீர்த்தமென்பதில் அதிஷ்டானமாயிருப்பவள் மாகேஸ்வரி, இவள் சர்வ மங்களங்களேயும் தருபவள். இவள் வாகனம் ரிஷபம்—எருது. தர்மத்தின் திருஉருவம். உழைப்பிற்குப் பேர் போனது.

## 3. கௌமாரி (குமார சக்தி)

மயில் வாகனம் மீது, கோழிக் கொடி சூழ, மகா சக்தி ஆயுதத்தை தாங்கி பாபமற்ற கௌமாரியாக விளங்குகிற நாராயணீ நமஸ்காரம்.

தேவர்களின் சேஞதிபதியாக விளங்கியவர் முருகன். இவருடைய வீரத்திற்குக் காரணமே குமார சக்தி தான். மன்மதனேப் பழித்த சௌந்தர்யத்தோடு கூடியவராகையால் சுப்பிரமணியத்திற்கு குமாரன் என்ற பெயர் ஏற்பட்டது.

குமாரர் அஹங்காரத்திற்கு தேவதையாக சொல்லப்படுவார்.

புருஷோ விஷ்ணுரித் யுக்த ஃ சிவோ வா நாம நாமத ஃ
அவ்யக்தம் து உமாதேவி ஸ்ரீர்வா பத்ம நிபேக்ஷணு |
தத் ஸமயோகாத் ஹம்கார ஃ ஸ ச ஸேநாபதிர் குஹ.

—வராஹ புராணம்.

சிவன் புருஷனென்றும், உமாதேவீ ஞானம் என்றும் இவ்விருவர்களின் சேர்க்கையால் உண்டான அஹங்காரமானது சேஞதிபதியான குஹன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அஹங்காரத்தினுடைய கணங்களே நாதர்களாகக் கொண்டவர்களே அம்பிகை அடக்கிக் கொண்டிருப்பதால் இவளுக்கு குமார கண நாதாம்பா என்ற பெயரும் உண்டு. வீரத்தை அருள இவள் தயவு வேண்டும். இவள் வாகனம் மயில். ஓம்கார ஸ்வரூபம்.

## 4. வைஷ்ணவீ (விஷ்ணு சக்தி)

சங்க சக்ர கதா சார்ங்க க்ருஹீத பரமாயுதே
ப்ரஸீத வைஷ்ணவீ ரூபே நாராயணீ நமோஸ்துதே ॥

வைஷ்ணவி ரூபிணியாக சங்கு, சக்கரம், கதை, சார்ங்கம் என்ற வில் இவைகளை ஆயுதங்களாகக் கொண்ட நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

லக்ஷ்மி ரூபமாக இருப்பவள் என்று அர்த்தம். விஷ்ணுவின் சக்தி ரூபமாக இருப்பவள்.

அம்பிகைக்கு வைஷ்ணவீ என்ற பெயர் ஏற்பட்டதற்கு வேறு காரணமும் சொல்லப்பட்டிருக்கிது.

சங்க சக்ர கதா தத்தே விஷ்ணுமாதா ததா அரிஹர
விஷ்ணு ரூபா தவா தேவி வைஷ்ணவீ தேவி தேந கீயதே ॥

என்று தேவி புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

விஷ்ணுவைப் போல சங்கு சக்ர கதை முதலியவைகளைத் தரிப்பதாலும், அவருக்கு ஜனனியாக இருப்பதாலும், அவரைப் போலவே சத்ருக்களை சம்ஹாரம் செய்வதாலும் வைஷ்ணவீ (விஷ்ணுவைச் சேர்ந்தவள்) என்ற பெயர் அம்பிகைக்கு ஏற்பட்ட தாக இதில் சொல்லப்பட்டிருக்கிறது.

அம்பிகையே விஷ்ணு. விஷ்ணுவே அம்பிகை, கோபிகைகளை மோகிக்கச் செய்த கிருஷ்ண ரூபம் தன் புருஷ ரூபம் என்பதை,

''மமைவ பௌருஷம் ரூபம்
கோபிகா ஜன மோகனம்''

என்று லலிதோபாக்யானத்தில் அம்பிகையே கூறுவதாக இருக்கிறது.

அதிலேயே வீரபத்திரரிடம் விஷ்ணு கூறியதாக,

ஆத்யா சக்திர் மஹேசஸ்ய சதுர்தா பிந்ந விக்ரஹா
போகே பவாநீ ரூபா ஸா துர்க்கா ரூபா ச ஸங்கரே
கோ பேச காளிகா ரூபா பும்ரூபா ச மதாத்மிகா ॥

என்றிருக்கிறது.

ஆதி சக்தியானவள் போக ரூபத்தில் பவானியாகவும், யுத்தத்தில் துர்க்கையாகவும், கோபத்தில் காளியாகவும், புருஷ ரூபத்தில் விஷ்ணுவாகவும் நான்கு பேதங்களான ரூபத்தில் இருக்கிறுள்.

கூர்ம புராணத்தில் ஹிமவான் தேவியை ஸ்தோத்திரம் செய்கையில் ''க்ஷீராப்தியில் சயனித்திருக்கும் நாராயணன்'' என்ற உன்னுடைய ரூபத்தை நமஸ்கரிக்கிறேன்,

ஸகஸ்ர மூர்த்தாநம் அநந்த சக்திம்
ஸகஸ்ர பாஹூம் புருஷம் புராணம்
சயாநம் அப்தெள லலிதே தவைவ
நாராயணுக்யம் ப்ரண தோஸ்மி ரூபம் ॥

என்று சொல்லப்பட்டிருக்கிறது. நம்மைக் காத்து நம் மனோ ரதங்களைப் பூர்த்தி செய்பவள் இவள். இவள் வாகனம் கருடன். பெரிய திருவடி.

## 5. வாராஹி

க்ருஹீதோக்ர மஹா சக்ரே தம்ஷ்ட்ரோத் ந்ருத வசுந்தரே
வராஹ ரூபிணி சிவே நாராயணீ நமோஸ்துதே ॥

வராஹ வடிவங் கொண்டு பெரிய சக்கரத்தைத் தாங்கியவளும், பூமியை தெற்றிப்பல்லால் ஏற்றித் தூக்கிய வளுமான மங்களமய நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

இவளும் விஷ்ணு சக்தி வகைகளில் ஒருவள். அம்பிகையின் அம்ச சக்திகளில் தண்டினி எனப் பெயர் பெற்று அம்பிகையின் சேனுதிபதியாகத் தொண்டாற்றுபவள்.

திரிபுரா சித்தாந்தம் என்னும் நூல் பராசக்தி வராஹானந்த நாதர் என்பவருக்கு வராஹத் திருமுகத்துடன் தரிசனம் தந்தமையால் வாராஹி என்ற பெயர் பெற்ருள் என்கிறது. வாராஹியைக் குறிக்கும் 32 செய்யுட்கள் அடங்கிய நூல் 'வாராஹி மாலை' என்று ஒன்று உள்ளது. இவளுக்கு சூலம், உலக்கை ஆயுதங்கள்.

சத்ருக்களை ஒழித்துக் கட்டுவதற்கு இவள் அருள் அவசியம். இவள் ஸ்தம்பனம் செய்வதில் நிபுணி. வாக் ஸ்தம்பனம் அதாவது பேச்சை நிறுத்துபவள். இவளுக்கு ''வல்கா முகி'' என்ற பெயரும் உண்டு. அதாவது லகான் போடுவது போல கட்டிப் பிடிப்பவள். வல்கா முகியே பகளா முகி ஆகிவிட்டது.

## 6. மாகேந்திரி (இந்திர சக்தி)

கிரீடினி மஹா வஜ்ரே ஸஹஸ்ர நயனோஜ்வலே
வ்ருத்ர ப்ராணஹரே சைந்த்ரி நாராயணீ நமோஸ்துதே ॥

கிரீடம் தரித்து, பெரிய வஜ்ராயுதம் தாங்கி, ஆயிரம் கண்களுடன் ஜ்வலிக்கும் இந்திர சக்தியே, விருத்திராசுரன் பிராணனை போக்கியவளே, நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

இவள் இந்திரனின் சக்தி. ராஜ்ய லாபங்களைக் கொடுப்பவள். ஐராவத யானையே இவள் வாகனம். தேவலோக ராஜ்ய பாரமே நடப்பது இவள் சக்தியால் தான்.

அம்பிகைக்கு ஸாம்ராஜ்யதாயினீ என்றே ஒரு பெயர். ராஜசூய யாகம் செய்த மண்டலேஸ்வரனுக்கு அல்லது ராஜாதி இராஜனுக்கு ஸம்ராட் என்று பெயர். அப்பேர்ப்பட்ட பதவிக்கு ஸாம்ராஜ்யம் என்று சொல்வர்.

இங்கு பக்தர்களுக்கு ராஜ்யம் அளிப்பது என்பது வைகுண்டம கைலாசம் இவைகளைக் குறிக்கும். அரச சம்பத்தெல்லாம் இந்த சக்தியின் அனுக்கிரகத்தால் ஏற்படுகிறது என்பதைச் சொல்லும் லகு ஸ்துதி ஸ்லோகம்.

ஜாதோ ப்யல்ப பரிச்சதே க்ஷிதிபுஜாம் ஸாமாந்ய
மாத்ரே குலேநி : க்ஷோவனி சக்கிரவர்த்தி
பதவீம் லப்த்வா ப்ரதா போன்னத :
யத் வித்யாதர ப்ருந்த வந்தித பத : ஸ்ரீ வத்ஸ ராஜோ பவத்
தேவி த்வச் சரணும்புஜ ப்ரண திஜ : ஸோயம் ப்ரஸா
தோதய : ।

## 7. சாமுண்டா

தம்ஷட் ராக ரால வதனே சிரோமாலா விபூஷணே
சாமுண்டே முண்ட மதனே நாராயணீ நமோஸ்துதே.

தெற்றிப்பல் திருவாயும், முண்ட மாலையை அணிந்தவளும், முண்டனை சம்ஹரித்தவளுமான நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

இந்த தேவி மிக அதிகமான கோபத்துடன் கூடியவள்.

பிரும்மத்தின் கோபத்திற்குப் பயந்து வாயு, அக்னி, சூரியன் முதலியவர்கள் நடந்துக்கொண்டதாக ''பீஷாஸ்மாத் வாத : பவதி'' என்ற ச்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

சிறிதுகூட கோபம் இல்லாதவனிடம் பிரஜைகள் பயப்பட மாட்டார்கள். அப்படி பிரஜைகள் எவனிடம் பயப்பட வில்லையோ அவன் நீதியை ரக்ஷிக்கமாட்டாதவன் என்று,

ந யஸ்ப கோபோணுரபி ப்ரஜாஸ் தஸ்ய நபிப்யதி
ஸைதாம் நீதிம் கதம் ரக்ஷேத் ப்ரஜாயஸ்ய ந பிப்யதி ।

என்று நீதி சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

இவ்விதம் பிரும்மமானது பயத்தை விளைவிப்பதைப் பற்றி,

''மஹத் பயம் வஜ்ரமுத்யதம்''

என்று ச்ருதி வாக்யத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சண்டா என்பது சங்க புஷ்பத்திற்குப் பெயர். அப்புஷ்பத்தில் ப்ரீதியுள்ளவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

## 8. மஹா லக்ஷ்மி

லக்ஷ்மி லஜ்ஜே மஹாவித்யே ச்ரத்தே புஸ்டிஸ்வதே த்ருவே
மஹாராத்ரி மஹாவித்யே நாராயணீ நமோஸ்துதே ||

லக்ஷ்மியாகவும், லஜ்ஜையாகவும், மகா வித்யையாகவும், சிரத்தையாகவும், புஷ்டியளிக்கும் ஸ்வதா தேவியாகவும், நிலைபெற்றவளாயும், மகா ராத்ரியாகவும், மகா மாயையாகவும் உள்ள நாராயணீயே நமஸ்காரம்.

அம்பிகைக்கு மகாலக்ஷ்மி என்ற பெயர் இருப்பதாகப் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

தஸ்யாங்க மண்டலா ரூடா சக்தி : மஹேஸ்வரி பரா
மஹா லக்ஷ்மி ரிதிக்யாதா ச்யாமா ஸர்வ மனோஹரீ

என்கிறது சிவ புராணம்.

''ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்ச பத்ன்யௌ'' என்கிறது புருஷ ஸூக்தம்.

ஹ்ரீயும், ஸ்ரீயும் திருமாலின் மனைவிகள் என்கிறது வேதம்.

''ச்ரியம் லக்ஷ்மீம் அம்பிகாம் ஔபலாங்காம்'' என்கிறது ஆயுஷ்ய ஸூக்தம்.

''த்ரயோதசே மகாலக்ஷ்மி''

என்றபடி பதின்மூன்று வயதுடைய கன்யா ரூபமாக இருப்பவள்.

அஷ்ட ஐஸ்வர்யங்களும், நவ நிதிகளும் கிடைக்க இவள் அருள் வேண்டும்.

மகா காளி, மது கைடபர் என்ற இருவரை மட்டும் சம்ஹரிக்க வேண்டி வந்தது.

மகிஷாசுரன் பெரும் படையுடன் சண்டைக்கு வந்தான் என்றால் அவன் சேனாதிபதிகளையும் அவனுக்கு உதவியாகக் கூற முடியாது. ஏனென்றால் அவர்கள் மிக சாதாரணமானவர்கள்.

சும்ப, நிசும்பர்கள் கூட்டாளிகள் ஒவ்வொருவரும் பெரும் தபஸ்விகள். ஒவ்வொருவரும் ஏக சக்ராதிபத்யம் செலுத்தக் கூடியவர்கள். அம்பிகையும் இதற்கேற்ப தன் சக்திகளை பெருக்கிக்

கொண்டதில் வியப்பில்லை. ஆகவே சாமுண்டேஸ்வரி அஷ்ட சக்தி களை சேர்த்துக்கொண்டே காரியத்தை முடித்திருக்கிருள்.

துக்கம், அக்ஞானம் தாங்கள் உள்ளளவும் தங்களை மெய் யாகவே எண்ணி வரும். ஆனுல் பொய்யின் விஷயம் அப்படி யில்லை. அது என்றுமே இல்லாத வஸ்து. ஆனுல் இருக்கிறது போல எண்ணச் செய்து தன்னைக் காத்துக்கொள்கிறது. அசல் ஒன்று தான் இருக்க மூடியும். போலி எவ்வளவு வேண்டுமானுலும் இருக்கலாமல்லவா?

விதவிதமான போலிகளை வதைக்க சத்தியமும் வித விதமான ரூபம் ஏற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

## சமஷ்டி சதி தேவதைகள்

மூன்று சரிதங்களிலும் கூறப்பட்ட சதி தேவதைகளின் சமஷ்டி ரூபம் :

நந்தா, சாகம்பரீ, சதாக்ஷீ, பீமா, ரக்த தந்திகா, துர்க்கா, ப்ராமரீ, சிவதூதி, சின்னமஸ்தா.

பார்வதியின் சர்மத்திலிருந்து (கோசம்—உறை. சரீரத்திற்கு உறை போன்றது சர்மம்) உண்டான தேவிக்கு கௌசிகீ என்று பெயர். இவள் கருத்த நிறமுடையவளானதால் காளிகா எனப் பெயர் பெற்ருள்.

மழையில்லாத காலத்தில் முனிவர்களால் துதிக்கப்பட்டு 100 கண்களுடன் தோன்றி அருள் பாலித்தால் 'சதாக்ஷி'

தன் உடலிலிருந்து உண்டான சாகங்களால் (காய்கறிகளால்) உலகின் பசிப் பிணித் தீர்த்தமையால் 'சாகம்பரீ'

அசுரர்களை பற்களால் கடித்து அழித்தபோது பற்கள் சிவந்தமையால் 'ரக்த தந்திகா.'

அருணன் என்ற அசுரனை வண்டுகளாக ரூபம் எடுத்து கொன்றதால் 'ப்ராமரீ.'

துர்க்கன் என்ற அசுரனை கொன்றதால் 'துர்க்கா'.

விந்திய மலையில் வசிப்பதால் 'விந்த்யா வாஸினீ'.

ரக்த பீஜன் என்ற அசுரனுடன் போரிடச் சென்றபோது சிவனை தூது அனுப்பியதால் 'சிவ தூதி'.

பயங்கர ரூபமுடையவள் ஆதலால் 'பீமா'

நந்தகோபனுடைய குலத்தில் உதித்தால் 'நந்தா'.

சலகன் என்ற அசுரனை வதம்செய்ய அவதரித்து, அருகிலுள்ள யோகினிகளை தன் முண்டத்திலிருந்து வரும் ரத்தப் பெருக்கை பருகும்படிச் செய்யும் திருக்கோலத்துடன் ரதி மன்மதர்கள் மீது நிற்கும் சக்தி தன் தலையையே வெட்டி கையில் தாங்கியுள்ளலால் 'சின்ன மஸ்தா'.

இத் தேவிகளின் ரூப லக்ஷணங்களை விளக்குவது 'சப்த சதி'யின் பின் அங்கமான 'மூர்த்தி ரகஸ்யம்' என்ற பகுதி.

## மூர்த்தி-ரஹஸ்யம்

ருஷிருவாச ||

நந்தா பகவதீ நாம யா பவிஷ்யதி நந்தஜா |
ஸா ஸ்துதா பூஜிதா பக்த்யா வசீகுர்யாஜ்-ஜகத்-த்ரயம் || 1

ரிஷி கூறியது—

[எந்த பகவதியானவள் நந்தா என்ற பெயருடன் நந்தனுடைய புத்திரியாகத் தோன்றப் போகிறுளோ அவள் பக்தியுடன் துதிக்கப்பட்டுப் பூஜிக்கப்பட்டால் மூவுலகையும் வசமாக்குவாள்.]

கனகோத்தம-காந்தி: ஸா ஸுகாந்தி-கனகாம்பரா |
தேவீ கனகவர்ணுபா கனகோத்தம-பூஷணு || 2

[அந்த தேவியானவள் பொன்போன்று அழகாய் ஒளி வீசும் ஆடையும் சிறந்த பொன்னணியும் அணிந்துபொன் நிறத்தினளாய்ப் பொன்போல் ஒளிர்பவள்.]

கமலாங்குச-பாசாப்ஜை-ரலங்க்ருத-சதுர்ப்புஜா |
இந்திரா கமலா லக்ஷ்மீ: ஸா ஸ்ரீ ருக்மாம்புஜாஸனு || 3

[தாமரையும், அங்குசமும், பாசமும், சங்கமும் அலங்கரிக்கும் நான்கு கைகளையுடையவள். அவளே இந்திரா, கமலா, லக்ஷ்மீ, ஸ்ரீ, பொற்றுமரையில் வீற்றிருப்பவள்,]

யா ரக்ததந்திகா நாம தேவீ ப்ரோக்தா மயானக |
தஸ்யா: ஸ்வரூபம் வக்ஷ்யாமி ச்ருணு ஸர்வபயாபஹம் || 4

[பாவமற்றவளே! (முதலில்) ரத்ததந்திகா எனப் பெயர் பூண்டவள் என எந்த தேவியைக் கூறினேனே அவளுடைய ஸ்வரூபத்தைக் கூறுகிறேன், கேட்பாய். (அது) பயமனைத்தையும் போக்குவது.]

ரக்தாம்பரா ரக்தவர்ணு ரக்தஸர்வாங்க-பூஷணு |
ரக்தாயுதா ரக்தநேத்ரா ரக்த-கேசாதிபீஷணு || 5




முடிவுரை

## மகாயாக க்ரமாராதயா

அம்பிகையின் பெயர்களில் இது ஒன்று. மகா யாகம் மூலம் தேவியை ஆராதிப்பது மிகவும் சிறந்தது.

மகா யாகம் என்பது பிராம்ஹி முதலான மாத்ருகா தேவதைகள் அவர்களின் அம்சங்களான 64 யோகினிகள் இவர்களுக்கு பூஜை செய்து பின் செய்யப்படும் ஹோமங்கள். இது மிகவும் பயன்தரும் ஹோமம். தன் யோகினிக் கூட்டங்கள் சந்தோஷப்படுவதைக் கண்டு அம்பிகை மகிழ்ச்சி யடைகிறாள் என்று கூறப்பட்டுள்ளது.

இந்த சண்டி ஹோமத்தில்தான் எவ்வளவு தேவதைகள் ஆராதிக்கப்படுகிறார்கள்; மஹாராக்ஞியான அந்த மகாராணியை, ராஜராஜேஸ்வரியைக் கண்டு வழிபடுமுன் இவ்வளவு தேவதைகளையும் பூஜித்து அவர்கள் அருள் பெற்று அம்பிகையை அணுகுகிறோம்.

இந்த பூஜை ஹோமம் இரண்டையும் கிரமப்படி சிதக்னி குண்டத்தில் செய்து மகா பைரவர் லலிதையை ஆவிர்பகிக்கும்படி செய்ததாக லலிதோபாக்யானம் கூறுகிறது.

கிரமப்படி செய்யும் பூஜையில் அம்பிகை 64 விதங்களில் உபசரிக்கப்படுகிறாள். 64 கலைகளின் ஸ்வரூபமாக இருந்து மகா சதுஷ்ஷட்டி கோடி யோகினி கணங்களால் தேவி பூஜிக்கப்படுகிறாள். ஆகவே 64 என்ற எண்ணிக்கை முக்கியத்துவம் பெறுகிறது.

அம்பிகையின் அம்சங்களில் சண்டி (துர்க்கை) நம்பிக்கையுள்ளவர்கள் ஆராதிக்க உதவுகிறது. துக்கம், பகைவர்கள் தொல்லை தோஷங்கள், உத்பாதங்கள் எல்லாவற்றையும் பக்தன் அறியாமலேயே காத்து ரக்ஷிப்பவள் சண்டிகா பரமேஸ்வரி. முப்பெரும் சக்திகளோடு திகழும் மாபெரும் சக்தி இவள்.

இந்த ஹோமத்தின் மூலம் அவளை மந்திர வடிவிலும் யந்திர வடிவிலும் ஸ்தூல வடிவிலும் அக்னி ரூபமாகவும் வழிபடுகிறோம்.

இந்த சண்டி சப்த சதி முறை மகாராஜாக்களால் பின்பற்றப்பட்டது அதையே கோவிந்த ராஜாவும் பின்பற்றுகிறார்.

இந்த சண்டி சப்த சதியிலுள்ள 700 சுலோகங்களும் 700 மந்திரங்களாகும். இந்த 700க்கும் தனித்தனி பீஜாக்ஷரங்கள் உண்டு. இதுவரை இவை எப்புத்தகத்திலும் வெளியிடப்படவில்லை.

அம்பிகையை வழிபட வெண்ணெயை அளித்திருக்கிறோம். நெய் கிடைக்கவில்லையே என்று கவலைப்பட வேண்டியதில்லை. வெண்ணெயிலேயே நெய் இருக்கிறது என்பதை சொல்லியா தெரிந்துக்கொள்ள வேண்டும்?

சண்டிகா பரமேஸ்வரியின் அருள் எல்லோருக்கும் ஸித்திக்குமாக.

சுபம்

# "நஜன்"
# எழுதியுள்ள
# புத்தகங்கள்




| | | |
|---|---|---|
| கண் கண்ட தெய்வம் கருமாரி | ரூ | 4-00 |
| அன்னை பராசக்தி | | 3-00 |
| கருணை காமாக்ஷி | | 3-00 |
| துர்க்கா பரமேஸ்வரி | | 3-00 |
| ஸ்ரீ நவ துர்க்கா | ,, | 3-00 |
| லக்ஷ்மி கடாக்ஷம் | ,, | 3-00 |
| வரலக்ஷ்மி தாயே வருக வருகவே ! | ,, | 3-00 |
| ஜகன்மாதா லலிதா | ,, | 4-00 |
| மூக பஞ்ச சதி | ,, | 3-00 |
| வாக்தேவி வைபவம் | ,, | 3-00 |
| தேவி புவனேஸ்வரி | ,, | 3-00 |
| ஸ்ரீ சக்ர நாயகிகள் | ,, | 5-00 |
| மீனாக்ஷி திருவிளையாடல் | ,, | 3-00 |
| தேவி காயத்ரீ | ,, | 6-00 |
| ஸ்ரீ சாமுண்டீஸ்வரி | ,, | 2-00 |
| தமிழர் பண்டிகைகளும் பண்பாடும் | ,, | 6-00 |
| உலக மகா புருஷர்கள் | ,, | 6-00 |
| வாழ்க்கைத் தத்துவங்கள் | ,, | 6-00 |
| பாவை உணர்த்தும் தத்துவங்கள் | ,, | 3-00 |
| நமசிவாய வாழ்க | ,, | 4-00 |
| குரு தத்துவம் | ,, | 3-00 |
| சுவாமியே சரணம் ஐயப்பா | ,, | 3-00 |
| முருக தரிசனம் | ,, | 4-00 |
| ஏன் பள்ளி கொண்டீர் ? | ,, | 3-00 |
| தீப தரிசனம் | ,, | 3-00 |
| பாராயண மாலா | ,, | 3-00 |
| ஏழுமலை ஆண்டவன் | ,, | 4-00 |
| வினை தீர்க்கும் விநாயகர் | ,, | 4-00 |
| கணபதி ஹிருதயம் | ,, | 8-00 |
| ஹரிஹர அம்ச ஆசார்யர்கள் | ,, | 6-00 |
| ஸ்ரீதத்தாத்ரேய விஜயம் | ,, | 3-00 |

